Registered No. M. 1500.

"NAVASAKTI"

# நவசக்தி

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளிநாடு-வருடசந்தா | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரங் செய்யப்படமாட்டாது.

சிலம்பு கக | பிரசோற்பத்திஸ்ரீ புரட்டாசிமீ உகஉ (7—10—31) புதன்கிழமை | பரல் சுகூ



## இராமலிங்க சுவாமிகள்

எவ்வகைத்திறந் தவஞ்செயினு மெய்தரிதாந் தெய்வம்
எனக்கெளிதிற் கிடைத்தென்மன மிடங்கொண்ட தெ
அவ்வகைத்தாந் தெய்வமதற் கப்பாலாந் தெய்வம்[ய்வம்
அப்பாலாம் பெருவெளிக்கே யப்பாலாந் தெய்வம்
ஒவ்வகத்தே யொளியாகி யோங்குகின்ற தெய்வம்
ஒன்றான தெய்வமிக நன்றான தெய்வம்
செவ்வகைத்தென் றறிஞரெலாஞ் சேர்பெரிய தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

சத்தியமாந் தனித்தெய்வம் ... பறியாத் தெய்வம்
சத்திகளெல் லாம்விளங்கத் தானேங்குந் தெய்வம்
நித்தியதன் மயமாகி நின்றதெய்வ மெல்லா
நிலைகளுந்தன் னருள்வெளியில் நிலைக்கவைத்த தெய்
பத்திவலைப் படுகின்ற தெய்வமெனக் கெல்லாப் [வம்
பரிசுமளித் தழியாத பதத்தில்வைத்த தெய்வம்
சித்தியெலாந் தருந்தெய்வஞ் சித்தாந்தத் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.

## தீபாவளி பண்டிகை

நம் இந்திய நாட்டின் கண் சிறப்புற்றோங்கி எந்நாடுகளிலும் சென்று யாவரையும் வியப்புறச் செய்த நம் நாட்டுத் தாய்த்தொழிலாகிய பருத்தி, பட்டு, கம்பளம், சரிகை முதலியவற்றாலாய கைத்தொழில்கள் அந்நிய ஆதிக்கத்தின் சீர்கேட்டாலும், அவர்கள் சுயநலத்தை யுத்தேசித்தும், பிரஜைகளின் அயர்வாலும், சர்வ வியாபகமும், நற்கியாதியும் வாய்ந்திருந்த நம் பருத்தித் தொழிலை கவனிப்பாரின்றியே க்ஷீண கதியையடைந்து விட்டது. மனிதனுக்கு உடை இன்றியமையாததாகும். அவைகளை நாமே தயாரித்துக் கொள்வது நம் தேச மக்களுக்குரியனவாயிருப்பதற்கு பதிலாக அந்நிய நாட்டையே நம்பி யிருக்கும் காலத்தை யுத்தேசித்தால் நம் அறிவீனத்தை என்னென்றுரைப்பது. அதாவது ஒருவன் வீட்டில் சகல பொருள்களும் நிறையப்பெற்று அதைப் பண்படுத்தி உபயோகிக்கும் வகையறியாமல் மாற்றானை எதிர் பார்ப்பது விந்தையிலும் விந்தையே! இதனால் நம்மிந்திய மக்கள் அடைந்த கதியென்ன?

வறுமையே! வறுமைப் பிணியே! இதையகற்றுவான் பொருட்டு நம்மிந்திய மக்களனைவரையும் விழிப்புறச் செய்தும், வறுமைப் பிணியை யகற்றவும், தேசம் தழைத்தோங்கி முன்னேற்றமடையவும், புவனங்களுக்கே ஒப்பற்ற அவதார புருஷனாக அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடித்து சத்தியமே உருவாய்க்கொண்ட காந்தியடிகள் நம்மிடம் தோன்றியிருக்கிறார். அவர்கள் செய்யும் உபதேசம் சர்க்காவை வீடுகள்தோறும் வைத்து ஓய்வு நேரங்களில் நம் தேசத்திய விளைபொருளாகிய பருத்தியைக்கொண்டே நூல் நூற்று அவரவர்களுடைய ஆடைகளை தயாரித்து அணிய வேண்டுமென்பதே! இது [illegible] யான வழி. ஏழை மக்கள் கைக்கொள்ளும் வழி! தனவந்தர்களும் கல்வெண்ணம் வாய்ந்து முன் வந்து சுயநலம் கருதாமல் நம் தாய்நாட்டின் கைத்தொழில் அபிவிர்த்தியையே பிரதானமாகக் கோரி, நம் சகோதரர் ஏழை மக்களுக்கு உணவளிக்கும் எண்ணம் கதர்ச்சாலைகளை ஆங்காங்கு ஏற்படுத்தி நம் நாட்டின் பணம் அந்நிய தேசத்துக்குப் போகாமல், முக்கியமாய்ப் பருத்தி செசவுத் தொழிலை நடத்துவார்களாக! அவ்விதம் சில அறிஞர் பெரியோர் ஏற்கனவே ஆரம்பித்து நடத்தி வருகிறது மெச்சத்தக்கது! சுதேச பிமானமுள்ள ஒருவன் ஏழையாயினும் சரி, தனிகனாயினும் சரி கதராடையே அணிய வேண்டும், அதன் அபிவிர்த்தியிலேயே முயற்சிக்கவேண்டும். பகட்டான போலி விஷயங்களில் ஏமாற்றமடையக்கூடாது. அந்நியதேச சரித்திரங்களைப் பார்த்தாவது அவர்களிடமிருக்கும் சுதேசிய உணர்ச்சியை இந்தியராகிய ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டும். இதற்குதாரணமாக நம்மிந்தியத்துணிகள் முன்னொரு காலத்தில் இங்கிலாந்துக்கு மிகுதியும் ஏற்றுமதியாகி வந்த பொழுது அத்தேசக் கைத்தொழிலை முன்னேற்றமடையச்செய்யும்பொருட்டு நம்மிந்தியத்துணிகளின்மீது காப்பு வரியை யேற்படுத்தினார்கள். அவ்விதம் நடத்த அரசாங்கம் உதவி புரிந்தது. நமக்கு அப்படிப்பட்ட உதவி கிடைக்காது. ஆகையினால் நம்மிந்திய சகோதர சகோதரிகளனைவரும் வீண் ஆடம்பரத்திலும், பகட்டிலும் ஈடுபடாமல் கதராடையையே வாங்கியணிந்து ஆனந்திக்குமாறு மிகத்தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இவ்விதம் செய்வதில் நமக்கு சீக்கிரம் சுயராஜ்யம் கிடைப்பது திண்ணம். இதுவே காந்திமகானுடைய கட்டளையும் திருவாக்குமாகும். தீபாவளி பண்டிகை சமீபித்துவிட்டது. ஜாக்கிரதை. ஏமாறுதீர்கள். காந்திமகானுடைய கட்டளை பூர்த்தி யடையும்படிக்கும் நம் தேச முன்னேற்றத்தை யுத்தேசித்து கதராடையையே வாங்கியணியுமாறு மற்றுமொருமுறை மிகப்பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சித. கண்ணப்பன்.

---

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கக | பிரசோற்பத்திஸ்ரீ புரட்டாசிமீ உகஉ (7—10—31) புதன்கிழமை | பரல் சகூ

## பொன் நிலை குலைவு

ஸ்ரீமான் B. N. ராஜன், B. A. (HONS.)

I

ஒவ்வொரு நாட்டினுக்குந் தனக்கேயுரித்தாய் ஆட்சியிற் பெறு நாணயங்களுண்டு. இவை அவ்வவற்றின் சரித்திர வரலாறு, மக்கள் பழக்க வழக்கம், செல்வ நிலை, நாகரிகம் இவற்றால் வேறு படுவனவாம். பண்டமாற்றை (Barter)யே பெரும் பாலாய்க்கொண்டதாம் பண்டைய வாணிபமாகலின் இவ்வாறாய் நாடு தொறும் வேறுபடு நாணயத்திரள்களால்எழுந்த அந்நாளில் இடுக்கண்யாதுமில. ஆனால், சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில், மேனாட்டின் கண் குறிசான்ற சில நிகழ்ச்சிகள் நடந்தன. புத்தம் புதிய கலைகளும், புத்தம் புதிய வுலகுகளும், காலமுஞ் சேணுங்கதுமென வெல்லு நுண்கருவிகளும், ஒருங்கே கிளர்ந்து "பெருந் தொழிற் பிறழ்ச்சி" (Industrial Revolution) என்னும் பெரியதோர் இயக்கமாய்த் திரண்டது ; உலகவுருளையின் ஒரு கோடி மற்றொன்றோடிடையீடாய் இணைக்கப் பெற்றது ; உலக வணிகம் உயர்ந்தோங்கிற்று. நாடுகள் தம்முள்ளெழுந்த நெருங்கிய வாணிப வுறவால், பண்ட மாற்றல் பழமை பெற்றது ; நாணய மாற்றத்தின் இன்றியமையாமை பெறப்பெற்றது. நிலையுந் தொடர்பு மின்றி முறையின்றிக்கிடந்த தத்தம் நாணயக் குவியலினை, சீருஞ் செல்வமுஞ் சிறந்துள தேயங்கள், நிரல்படவைக்க முற்போந்தன. நாணயத்தைப் பண்டுபோல் உலோகங்களாலுமன்றி, காகிதத்தாலுஞ் சமைத்துக்கொண்டு பொன்னின் பயனைப் பெருக்கினர். இத்தனைமாற்றுப் பொன்னுக்குத் தம் நாணயம் இத்தனை யளவை கொண்டது எனத் திட்டமாய்ச் சட்ட மூலம் முடிவு கட்டி, பொன்னொடுந் தம் நாணயத்தைப் பிணைத்துப் பொன் நிலை நிறுவினர். அருகிய அளவு, மங்கா ஒளிமை, வகுத்தற்குரிமை, வலிமை, காண்பார் கண்ணைக் கவருந் தன்மை, மிக்கு மாற்றமில்லா நிரந்தர விலையுடைமை, எவர்க்கும் ஏற்புடைத்தாந் தன்மை என்றிக் குணங்கள் கண்டே பொன்னை யூன்றற்குரியப் பொது உலோகமாய்க் கொண்டனர்.

இங்கிலாந்தும் சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதியில் பொன் நிலை நிறுவிற்று. பொதுவாய்ப், பொன் நிலைக்கு அன்னாருடைத் தாம் அங்கங்கள் மூன்றாம்.

1. நாணயத் தொடரினை (Currency System) பொன்னொடும் பிணைத்து இரண்டினுக்கும் இயற்கையில் நிலவும் நிரக்கு விகிதம் கண்டு வகுப்பது.

2. அவ்விகிதத்தின் அசையா நிலை காத்தலைக் காட்டவேண்டி, மக்கள் வேண்டுங்கால், நாணயத்துக்கு நேராய் பொன்னும் பொன்னினுக்கு நேராய் நாணயமும் விகிதவளவுப்படி அதிகாரிகள் மாற்றி வழங்கல்.

3. பொன்னிற்கு நாணயமோ, அன்று மாறாகவோ, உள் நாட்டன்றிப் புறநாட்டு வேண்டுதல்களுக்கு மாற்றிக் கொள்ள மக்களுக்கு முழுஉரிமை அளித்தல்.

செப்டம்பர் மாதம் 21-ம் நாள் திங்கட்கிழமை காலையில், தன் தங்க நிலை தகர்த்தது எனவே, மேற் பொறித்த மூன்றங்கங்களு முடனேயே பிறழ்ந்தனவாயின. ஸ்டெர்லிங் என்ற ஆங்கில நாணயத் தொடரினுக்கும், பொன்னுக்குமுள்ள விதி விகிதம் நின்றது. ஸ்டெர்லிங் நோட்டிற்கு நேராய் முன் விகித முறையிற் பொன் வழங்கப் பெறமாட்டாது ; பொன்னின் விலை பொங்கியது என்பதாயிற்று. இதனால் வரு நல்லவை அல்லவை எவையெனக் காண்பான் முன், இந்நிகழ்ச்சி எழுந்தவா றெங்ஙனென்று காணுதும்.

பொருள் புரி வுலகிலே (Economic World) பொங்குந் தோற்றங்களுக்குரிய ஏதுக்கள் 'இவை தாமே' 'இன்று தாமே' எனச் சுட்டுதற்கியலா. என்னெனின், பொருள் புரிநூல் (Science of Economics) என்பது, ஒவ்வாவுள்ளமும், மாறிய மனனும் படைத்த மக்கள் தாம் சூழ்ச்சி மிகப் பொருளீட்டு வினையிற்கண் விழைக்கு நெறியினைச் சோதனை செய்யு நுண்கலையாகலின், ஒரோ புலவரும் ஒரோ காரணத்தையே தலையாயதெனச் சாதித்து நிற்பர். மற்றவை ஒரோ காலும் அவருக்கு உடம்பாடேயாமாயினும், அவற்றினைக் கிளை அல்லது உதவி காரணங்களாகவே கொள்ளுவர் புலவர்.

இவ்வாறே, இஞ்ஞான்றுஇங்கிலாந்து தன் நாணயத்தின் தங்கத்தளை யறுத்தற்கும், பல காரணம் பகருவர். அரசியல் இயக்கங்களென்பார் ஒரு சிலர். ஆனால், இவர் பொருள்புரி நூல் புலவரலர். சென்னைச் சர்வகலாசாலை பொருள் புரிநூற் பேராசிரியர் திரு. பி. ஜெ. தாமஸ் என்பார் கூறுவர்: "இதனை நீர் அரசியற் செய்கைகளான் விழைந்தது வென அறைகுவீரேல், மண்ணுலக மாக்கள் தஞ்செயல் பெரும்பாலாய்அரசியலுணர்ச்சிகளாலேயே ஆக்கப் பெறுவது ; பொருள்புரி வுணர்ச்சியன்று என்னும் கருத்தினை அடிப்படையாக் கொண்டவராவீர் ; எனவே பெரிதும் பிழைத்தீர் ; மாக்களை இயக்குவது முக்கியமாய்ப் பொருளாற்றுமுணர்ச்சியே".

இப்பெரு நிகழ்ச்சியின் காரணங் காணுவான் காலக் கருந்திரையைச் சிறிதே விலக்கி, ஏழாண்டின் முன்னே நடந்ததொரு சம்பவத்தை உள்ளல் வேண்டும். ஆ! ஓர் இருள் சூழ்ந்த வுலகம் ; நோக்குமிடமெங்கும் நீக்க மற நிறைந்த வெடிப்புகை, குருதியாறுகள்; பிணக்குண்டங்கள். ஆ! நெஞ்சுபொறுக்குதில்லை அந்தக் காட்சி! ஐரோப்பிய வரசுகள் ஒன்றோடொன்று போர் தொடுத்து நிற்கின்றன. மக்களுக்கு வேண்டப்படும் பொருளீட்டுவாரில்லாது, பண்டங்கள் பணிப்பாரில்லாது வறுமையுங் கொலையும் அவரை வாட்டுகின்றன. (இவற்றினைவிரிப்பது பொருள் புரிநூலார் பணியல்ல) பிறர் துயரங் கண்டு சிறிது புன்னகை தவழவே நிமிர்ந்து நிற்கும் அமெரிக்காவை நோக்கினர். 'கடன்' 'கடன்' என இரந்து நின்றனர். ஐரோப்பிய அரசுகள்—வல்லரசுகளும், வேண்டு மளவும் அமெரிக்காவும் கடன் கொடுத்தன. பொன்னுயல்ல ; போரில் வேண்டப்படும் பண்டங்களால். நண்டுக்குத் திண்டாட்டம் நரிக்குக் கொண்டாட்டம். நிதியும், கணவனும், நெறிமிக்க சிறார்களையுமிழந்த உலக அரசத் தாய்மாரெல்லோரும் 1919ல் ஒருங்கே மன்றம் போந்து பெரியதோர் உடன்படிக்கை தீட்டினர். அன்று நாள், அரசியல் வாதிகள் அசட்டையாய் நகை புரிய, தம் கூர்த்த மதியால், திரு. நார்மன் ஏஞ்சல் (Mr. Norman Angell in his 'Great Allusion') என்பார் கணித்தவாறே, போர் முயக்கிய அரசுகள் இறுதியில் கடனாளிகளாய்க் காணப் பட்டன. வென்றவராயினும் அன்றித் தோற்றவராயினும் அஃதே. அமெரிக்கா மட்டும் பெரு முதலாளியாகி விட்டது. சிறிதளவுக்குப் பிரான்சும் அவ்வாறே.

பெருங்கடன் முதலையும், வட்டியையும் முறையே செலுத்து நோக்குடனே அரசாங்கங்கள் போர் போழ்தினும் பன் மடங்காய் முயக்கிப் பண்டங்களாக்கிப் பொருள் திரட்டி, அமெரிக்காவின் அடிகளில் ஆண்டு தொறுமுரிய தோர் திறையெனச் சமர்ப்பித்து நின்றன. வறுமை மிக்கது ; அரசியற் குழப்பங்கள் அதிகரித்தன ; சூழ்ச்சிகள் நிரம்பின. இது காலை பொருள் புரிவுலகில் (Economic world பிறிதோர் பெருஞ் சுட்டுப் பிறழ்ச்சி போந்தது.

தத்தமக் கின்றியமையாப் பொருட்கட்கு ஏதிலாரை எதிர் - பார்ப்பது தம்மை வறியராக்கும் தகைவிலா அடிமையாந் தன்மை யெனப் போரின் பயனுயுணர்ந்தவராய், ஒவ்வோரரசும் 'பொருள் புரி சுதந்திர'க் கொள்கை (Economic Nationalism)யினை மேற்கொண்டது. தம் நாட்டுள் இறக்குமதிப் பண்டங்கள் வருவதைத் தடுத்து, அப்பண்டங்களைத் தாந்தாஞ் சமைக்குஞ் சிந்தையினராய், இறக்குமதிப் பொருள்மேற் பெருஞ் சுங்க வரியினை வீழ்த்தினர். இவ்வாறேக்கிய சுங்கச் சுவரினைத் தாவி நாட்டுள்ளே பொருட்கள் புகுவதற்குள், அவற்றின் விலையுமுயர்ந்தன. அதனினும் அடங்கிய விலைக்குத் தம் நாட்டுள்ளே அவை அமைக்கவும், பின் மலியவுஞ் செய்துவிட்டனர். அமெரிக்காவே மற்றெல்லா வரசாங்கங்களினும் மேலாய்த் தன் தொழில்களுக்கு இவ்வித காப்பு (Protection) உதவி வந்தது.

பயனற்ற போர்த்தொழிலிற் பிரிந்து, பயன் பெறு பண்டங்கள் பணிக்க எல்லோரு மொருங்கே யுற்றமையாலும், கடன் கட்டுங்கவற்சியால் முன்னிலும் மூக்காய் உஞற்றியதாலும், பண்டங்களோ பல்கின. பொருள் புரி சுதந்திரத்தாலும், போரினால் வறியராய்ப் போயினமையாலும், பணமோ அருகினது. பண்டங்கள் பெறுவாரில்லை ; அவைகள் விலை வீழ்ந்தது. பெருத்த வாணிபச் சோர்வு கிளந்தது. அமெரிக்காவும் தனக்கு நேரும் பொருளினைப் பொன்மாத்திரையாகவே வேண்டி நின்றது ; பண்டங் கொள்ளேனென்று சுங்கச் சுவரும் வீக்கியது. பிரான்சும் பிறிது பகர்ந்தன்று. பொன்னெலாந் திரண்டு திரண்டு, இவ்விரு அரசாங்கக் கருவூலங்களிற் கலந்து, கயவர் தந்திருவே போலவும், பாழுங் குட்டைத் தண்ணீரே போலவும், பூத்துத் தேங்கிக் கிடக்கின்றன. உலகின் ஆட்சியிற்பெறு பொன்னின் அரையளவு அவ்விரு அரசாங்கங்களாலும் கொள்ளப்பட்டிருக்கின்றது.

இப்பொதுவுலக நிகழ்ச்சிகளினின்று சற்றே விலகி, நம் வாழ்க்கைக்கு எவ்வாற்றானும் வெகு அணித்தாம் இங்கிலாந்தின் செய்தியினைக் காண்பாம்.

ஐரோப்பிய மாப்போரின் முன்னே, இங்கிலாந்து, பூமடைந்ததைக்கோர் திலகமெனப் பொலிந்து என்னும் உண்மையை ஒப்புக்கொள்ளவே வேண்டும். உலக வாணிபப் பொதுச் சந்தையாய்

மிளிர்ந்தது லண்டன்மா நகரே. அங்கேயே அரசுகள் பல போந்து பாங்கித் தொழில் (Banking) பல புரிந்தன; பாங்கிகளுக் கெல்லாம் பாங்காய்த் தாயகமாய்த் திகழ்ந்ததுவும், இங்கிலாந்தின் பாங்கே. (Bank of England) உலகக் கப்பற்றொழில் ஆற்றிவந்தது மக்காடே. உலகப் பெருங்கைத்தொழில் கொண்டிருந்ததுவு மஃதே. சுருங்கச் சொல்லின், வாணிப வுலகிலுக்கோர் நடுநாயகமாய் விளங்கிற்று. மாப்போரின் முன்னதா மிங்கலாந்து போர் பயந்ததுவெல்லாம் வெறு வென்றியே. உண்மையில், அதன் பொருள் ஆதார நிலை ஆடிவிட்டது. இங்கிலாந்து தன் கொல்லுந் தொழிலில் ஈடுபட, காலமறிந்து வெல்லுந் தன்மையனவாய் ஜப்பான், அமெரிக்கா முதலிய அரசுகள், ஆக்குந் தொழிலினைத் தேக்கி, இங்கிலாந்து வணிக வுலகில் உபபக்கங் காணுமாறு அதுகொண்ட சந்தைகளில் தாம் புகுந்து தம் பண்டங்களின் ஆட்சியினை நிறுத்தின. இலண்டன் சந்தை கொண்டிருந்த ஒப்புயர்வில்லாத் தன்மை கழிந்து, நியூயார்க்கு சந்தை அதனுடன் போட்டிக்கு வந்துவிட்டது.

செல் சமமுருக்கிச் சென்ற பின்னரும் அதன்கண் ஆழ்ந்து பாழாய அரசுகளெல்லாம் ஒருவாறு மீண்டுந் தெளிந்து வணிகப் போட்டியில் மற்றையவரசுகளுடனே கலந்து கொள்ளு நிலை எய்தின. எனினும் இங்கிலாந்திற்கு மட்டும் எழ அவ்வளவாய் இயன்றதில்லை. ஆங்கில நாட்டுப் பண்டங்களின் விலை மற்றைத் தேயத்தார் தங்களதினும் மிக்காய் நிற்றலாலேயே. இது இன்றும் காணப் பெறும், கடைகளிற் செல்லுங்கால். ஏறியவிலைக்கு ஏது யாதெனில், ஆங்கிலேயப் பண்டம் பணிப்பார் (manufacturers) மட்டும் அவற்றின் சமைக்கும் விலையை (முதல்-Cost of Production) மற்று நாட்டாரோடு ஒப்ப இறக்கிக்கொள்ள இயலாமையே ஆங்கிலத் தொழிலாளி சங்கத்தின் (Trade Union) தீவிர எதிர்ப்பால், தொழிலாளிகள் கூலி குறைக்கப்படவில்லை. முதலாளிகளும் தம் ஊதியப் பகுதியில் ஓரளவும் குறைத்துக் கொள்ளவில்லை. இதுவே யன்றியும், காலப்போக்கிற்கேற்ற புதுமைக் கருவிகளும், தொழிற் சீர்திருத்தமுங் கொண்டு, முற்போக்குறு முறை முன்னிலுங் குன்றியது, போரின் பின்னைய இங்கிலாந்தில் என்பாருமுளர்.

இங்கிலாந்தின் இற்றைய நிலைக்குப் பிறிதுமோர் காரணங்கூறுப. போரின் போழ்து நிலைகுலைக்கப்பெற்ற ஆங்கில நாணயத் தொடரை, 1925ல் மீண்டுஞ் செப்பன் செய்து தங்கத்தொடு நிலைக்குமாறு இணைத்தனர். அன்று அவர்கள் விதிவாய் நிறுவியவிகிதம் போர்க்காலத்தின் முன்னே வழக்கிற் போந்ததேயாமாயினும், போரின் முன்னும், 1925லும் உள்ள ஸ்டெர்லிங் என்னும் ஓரே நாணயத்துக்கே உண்மை விலை வேறுபடுவதாயிருந்தது. போர்காலத்தே கையாட வேண்டி வந்த வரையற்ற நாணயப் பெருக்கால், (Currency inflation) தக்களவு தங்க ஆதாரமின்றிய (Gold Reserves) நாணயத்தின் தொகை பல்கிற்று. எனவே அந்நாணயங்களின் பெறும் விலை (Purchasing Power) குறுகிற்று. (எப்பொருளேனும், பெருகினுற் பெறும் விலை அருகும், அருகினுற் பெறும் விலை பெருகும் என்பதை யுணர்க) பொன்னிற்கும் நாணயத்துக்கும் பெறு இயற்கை விகிதம் இவ்வாறு 10 சதம் குறைந்திருக்க, அதனைப் புறக்கணித்து நாணய அதிகாரிகள் 1925ல் முன்னைய விகிதத்தையே மீண்டுங் கொணர்ந்ததால், ஸ்டெர்லிங்கின் பெறும் விலை 10 சதம் செயற்கையாற் றூக்கப் பெற்றதாயிற்று. இதனுல் விளைந்ததைப்பொருட்புரிநூற்பேராசிரியர் திரு. கீன்ஸ் (Prof. Keynes) என்பார் விளக்கியுள்ளார். அமெரிக்கரோ அன்றி ஏதில் அயல் நாட்டினரோ, இங்கிலாந்தின் பண்டங்கள் கொள்ளும் போது, ஆங்கில நாணயத்திலன்றோ அவற்றின் விலையைச் செலுத்தவேண்டுவது? பொன்னினளவாய் ஆங்கிலநாணயத்தின் பெறும் விலை10 சதம்உயரவே, பிறதேயத்தார் ஆங்கிலப் பண்டங் கொள்ளும் ஓரோ காலும் உண்மையில் 10 சதம் முன்னிலும் மிக்கவே ஈந்து வந்தனர். இதனுல் ஆங்கிலப் பொருள்களின் மெய்விலை (Real Price) மிக்கது; ஆங்கில ஏற்றுமதி வீழ்ந்தது.

இங்ஙனே பல் வேறுய ஏதுக்களான் எழுந்த வணிக வறட்சியாலும், போரின் விளைந்த பெருங்கடனே ஆண்டு தோறும் அமெரிக்காவுக்குப் பொன்னளவாய்ச் செலுத்த வேண்டுவதாலும், அமெரிக்கா, பிரான்சு முதலாம் அரசுகள் மேற்கொண்ட சுயநல நெறியால் இங்கிலாந்து பயன் படுத்துந் தங்க வளவைத் தணித்தவாகலாலும், ஆங்கில அரசாங்கத்திற்குப் பொருள் தத்தளிப்புண்டாயிற்று.

## மதிப்புரை

### இந்திய ஸ்தலயாத்திரை மான்மியம்

முதற்பாகம்

[ஆசிரியர் :—ஸ்ரீமான் டி. பி. தாஸ் ராவ் பி. ஏ.; புத்தகம் கிடைக்குமிடம்: பாரதி அச்சுக்கூடம், சீகாழி; விலை: ரூபா ஒன்றேகால்; தபாற் கூலி வேறு.]

இந்நூலாசிரியர் அரசாங்க உயர்தர உத்தியோகத்திலிருப்பவர்; ஆயினும் சிறந்த தெய்வபக்தியுடையவர்; சுமார் ஆறு ஆண்டுகளுக்கு முன்னர் பாரத நாட்டிலுள்ள புண்ணிய தலங்களைச் சேவித்து வரவேண்டுமென்ற பேரவாவினுல் உந்தப்பட்டு, யாத்திரைக்குப் புறப்பட்டார்; சுமார் பத்துமாதகாலம் யாத்திரை செய்தார்; பல தலங்களைக் கண்டானந்த மடைந்தார். அவ்யாத்திரையின் பயனுகவே இந்நூல் இப்பொழுது தோன்றியுள்ளது. எனவே, இது, யாத்திரை செய்வோருக்குப் பெரிதும் துணை செய்யும் கருவியாயிலங்கும் என்பதில் ஐயமில்லை. சில நூல்களைப்போல், அந்தந்தத் தலங்களின்பெருமையைப்பற்றி மட்டும் இந்நூல் கூறவில்லை. யாத்திரை செய்வோர்என்னென்னதெரிந்து கொள்ள வேண்டுமோ, எதை எதைப் பார்க்க வேண்டுமோ, எந்தெந்த வழியாகச் செல்ல வேண்டுமோ ஆகிய எல்லாவற்றையும் பற்றி இது விரித்துக் கூறுகிறது. இந்நூலின் இரண்டாவது பாகத்தையும் நாம் ஆவலுடன் எதிர் பார்க்கிறோம். தமிழ் நன்மக்கள் இதனை ஆதரிப்பார்களாக.

### கோம்பி விருத்தம்

[ஆசிரியர்: ராவ் சாஹிப் வி. பி. சுப்பிரமணிய முதலியார்; பதிப்பாசிரியர்: ஸ்ரீமான் டி.கே.சிதம்பரநாத முதலியார், கமிஷனர், எச். ஆர். இ. போர்ட், சென்னை, விலை: எட்டு அணு; தபாற் கூலி வேறு.]

பேரறிஞரும், தமிழ்த் தாய்க்குப் பல அணிகலன்களை அணி செய்வித்த பெருந்தகையாளருமான ஸ்ரீமான் வி. பி. சுப்பிரமணிய முதலியாரவர்கள், ஆங்கிலத்தில் ஸ்ரீமான் ஜே. மெர்ரிக் என்பார் எழுதிய "தி கெமிலியான்" என்ற ஒரு பாடலின் சாரத்தை மட்டும் கைக்கொண்டு இச்செய்யுள் நூலை ஆக்கியுள்ளார். கோம்பி எனின் பச்சோந்தி என்று பொருள். இந்நூலாசிரியர்க்கு, இயற்கையினிடத்திலுள்ள தணியாக்காதலும், அதனை வருணிக்கும் ஆற்றலும், தமிழ் மொழி நயமும் எத்தகைய உயரிய தன்மையில் இலங்குகின்றன என்பதற்கு இந்நூல் ஒரு சான்று. பாட்டுகளுக்கு உரையும், வேறு பல குறிப்புகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதனை இரண்டாம்முறையாகப் பதிப்பித்து வெளிக்குக் கொணர்ந்த ஸ்ரீமான் டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களுக்கு நாம் பெரிதும் நன்றிபாராட்டுகிறோம்.

### நளவெண்பா மூலமும் அகல உரையும்

[வெளியிட்டோர் : ஸ்ரீசாது இரத்தின சற்குரு புத்தகசாலையார், 4/34, தைனியப்ப நாய்க்கன் வீதி, பார்க் டவுன், சென்னை. விலை : இரண்டு ரூபா; தபாற்கூலி வேறு.]

நளவெண்பாவின் பெருமையை நாம் விரித்துக் கூறவேண்டுவதில்லை. இதற்கு திருவாளர் ம. மாணிக்க வாசகம் பிள்ளை அவர்கள் ஓர் அகல உரைவரைந்துள்ளார்கள். இவ்வுரை தமிழ்மொழி பயில்வார்க்கு ஒரு நல்விருந்தாயுள்ளது. நூலுக்குச் சிறந்ததொரு பாயிரமும், செய்யுள் முதற்குறிப்பகராதியும் சேர்க்கப்பட்டுள்ளன. தமிழர் இல்லம் ஒவ்வொன்றிலும் இந்நூல் இலங்க வேண்டுவது அவசியமாகும்.

### உடற் பயிற்சி

(முதற் பாடம்)

[ஆசிரியர் : ஸ்ரீமான் லெ. சோமசுந்தரனுர்,கிழச்சிவற்பட்டி,இராமநாதபுரம் ஜில்லா; விலை: மூன்று ரூபாய்; தபாற் கூலி வேறு.]

தமிழ்நாட்டு 'சாண்டோ' என்று பெயர் பெற்றுள்ள நமது அன்பர் ஸ்ரீமான் லெ. சோமசுந்தரனுர் உடற் பயிற்சியைப்பற்றி ஒரு நூல் எழுதுதல் சாலவும் பொருத்தமுடைத்து. உடலை ஓம்புதல் எங்ஙனம் என்பதைப்பற்றி, அநுபவ பூர்வகமான பலகுறிப்புகள் இதில் காணப்படுகின்றன. பள்ளிக்கூடங்களில் இது பாடபுத்தகமாக வைக்கப்படல் வேண்டும் என்பது நமது கோரிக்கை. உடல் வெளுத்து, எலும்புந் தோலுமாய் வீதிகளிலேயுலவும் தற்கால நாகரிக இளைஞர்கள், அன்பர் சோமசுந்தரனுரைப்போல் தேகதிடமுள்ளவர்களாக வேண்டுவதற்கு இந்நூல் துணை செய்யும் என்பதில் ஐயமில்லை. தேகப்பயிற்சிக்குரிய பல படங்கள் இந்நூலில் மிளிர்கின்றன. நூல் மிக உயர்ந்தகாகிதத்தில் அச்சிடப்பட் டிருக்கிறது. தமிழ்நாட்டு இளைஞர்கள் இந்நூலை வாங்கி நலம் பெறுவார்களாக.

### உடற் பயிற்சி விளக்கம்

[ஆசிரியர் : ஸ்ரீமான் ஆவி.சித.சொக்கலிங்கன், வலயபுரி, பொன்னமராவதி போஸ்ட்; விலை: ஆறு அணு; தபாற் கூலி வேறு.]

திரு. சொக்கலிங்கனுர் எழுதி வெளியிட்ட இவ்வரிய நூலின் உள்ளுறை, உள்ளத்திற்கு உவகையளிப்பதுடன், உடலுக்கு உரமளிக்கும் தன்மையதாயுமிருக்கிறது. எவ்வித நோயுமின்றிப் பல்லாண்டுகள் வாழ்ந்து வருவதற்கு, அன்பர் தொகுத்துக்காட்டிய சில குறிப்புகள் எமது கவனத்தைப் பெரிதும் ஈர்த்தன. நாட்டுக்கோட்டைச் சமூகத்து அன்பர் பலரும், இதுகாலை, இத்தகைய அரிய நூல்களை வெளியிட்டு உலகுக்கு உதவிபுரியும் நற்றெண்டில் இறங்கியிருப்பது எமக்குப் பெருமகிழ்ச்சியை யூட்டுகிறது. 'சுவரை வைத்துக் கொண்டு சித்திரம் வரையவேண்டும்' என்று தமிழ்நாட்டில் ஒரு பழமொழி வழக்குவதுண்டு. அதுபோல், உடல் வளங்குன்றியுள்ள காலை, உலகத்தில் எந்த இலட்சியத்திற்காக நாம் பிறந்தோமோ அந்த இலட்சியத்தை நிறைவேற்றப் பெரிதும் இடர்ப்படுகிறோம். ஆதலின் உடலை ஓம்புந்துறையில் தமிழ்நாட்டு இளைஞர்கள் இறங்கி உழைத்தல் வேண்டும். ஸ்ரீமான் சொக்கலிங்கனுர் போன்ற இளைஞர்கள் இதில் முன்னணி வீரர்களாகத் திகழ்கிறுர்கள். இத்தகையவர்க்கு எல்லா நலன்களும் உண்டாகுக.

### சர்வகட்சி மகாநாடு

Articles on R. T. C. and other Addresses

[ஆசிரியர்: ஸ்ரீமான் சி. ஆர். ரெட்டி எம்.ஏ. வெளியிட்டோர்:தி.மாடர்ன் புக் மார்ட், 118, அரமனைக்காரன் தெரு, சென்னை; விலை: ஒரு ரூபாய்; தபாற் கூலி வேறு.]

இஃதோர் ஆங்கில நூல். சர்வகட்சி மகாநாட்டைப்பற்றியும்,வேறு பலவிஷயங்களைப் பற்றியும் ஸ்ரீமான் சி. இராமலிங்க ரெட்டியார் எழுதிய கட்டுரைகளையும், அவர் நிகழ்த்திய சொற்பொழிவுகளையும் திரட்டிக்கொண்டு இது வெளியாயிருக்கிறது. அறிவிலும் ஆராய்ச்சியிலும் ஸ்ரீமான் ரெட்டியாரைப் போன்றவர் சிலரேயுளர். சென்னைச் சட்ட சபையில் அங்கத்தினராயிருந்து அவர் ஆற்றிய தொண்டும், ஆந்திர சர்வகலாசாலையின் உதவித் தலைவராயிருந்து அவர் உழைத்த உழைப்பும் உலகறிந்த தொன்று. அவருடைய ஆழ்ந்த தேசபக்தியும், நுண்ணிய புலமையும் இந்நூலில் நன்கு மிளிர்கின்றன. இந்நூலுக்கு ஆசிரியர் பி. சி. ரே ஒரு முகவுரை எழுதியிருப்பது பொருத்தமுடைத்து. இந்நூலை அனைவரும் வாங்கிப்படிக்கவேண்டுமென்று நாம் பெரிதும் விரும்புகிறோம்.

### வரப்பெற்ற நூல்கள்

ஸ்ரீ அரவிந்தர் அருளிய அன்னை:—பாரத சக்தி நிலயம், புதுச்சேரி; விலை நான்கு அணு.

மாநூலம் பெற்ற மாண்புசால் மகரின் மாதூய வாழ்க்கை:—ஆசிரியர்: ஜனுப் கா. மு. அஹ்மது மீரான், தாஸ்புத்தக சாலை, உத்தமபாளையம், மதுரை ஜில்லா. இனுமாக அளிக்கப்படும்.

வள்ளலாரும் காந்தியடிகளும்:—ஆசிரியர்: ஸ்ரீமான் கா. சோமசுந்தரனுர், சுந்தரா அண்ட்கோபரங்கிமலை, சென்னை.

பழநி க்ஷேத்திரத்தின் வரலாறும் பாடல் திரட்டும்:—ஸ்ரீமான் பி. நடராஜபண்டாரம், மலைக்கோயில் ஐயன் மிராஸ், பழனி; விலை இரண்டு அணு.

அமிர்தசாகரம்:—ஒரு மாதப் பத்திரிகை. வருஷ சந்தா: உள்நாடு எட்டு அணு; வெளிநாடு 12 அணு. விலாசம்: 102, 49-வது வீதி, இரங்கூன்.

தென்னிந்திய ஜீவகாருண்யப் பிரசாரக சபையின் முதல் வருஷ அறிக்கை வரப்பெற்றோம். இச்சங்கத்தார் ஆற்றிவரும் சீரிய தொண்டை நாம் பெரிதும் பாராட்டுகிறோம்.

தெய்வபக்தியும் தேசபக்தியும்:—ஆக்கியோர்: டாக்டர் சவரிராயன் ஏசுதாசன், கிறிஸ்துகுல ஆசிரமம்; திருப்பத்தூர்; விலை: ஒன்றரை அணு.

சென்னை மயிலாப்பூர் அலயன்ஸ் கம்பெனியாரிடமிருந்து கீழ்க்கண்ட நூல்கள் வரப்பெற்றோம் :—

(1) ஆரியமத உபாக்கியானம் முதலிரண்டு பாகங்கள். முதல் பாகம் விலை 8 அணு. இரண்டாம்பாகம் விலை 10 அணு.

(2) பஞ்சரத்தினம் விலை 12 அணு.

(3) திருக்குறள் நீதிக்கதைகள் விலை 10 அணு.

(4) பாலஷண்முகவிஜயம் விலை 8 அணு.





தேயிலை வியாபாரஞ்செய்து அதிக பணஞ் சம்பாதித்த ஸர் தாமஸ்லிப்டன் சென்ற வாரம் காலஞ் சென்றுவிட்டார்.

o o o

இந்தியாமந்திரிசபையில் ஓர்அங்கத்தினராயிருந்த ஸர் வசந்தகுமார் மல்லிக் 2-10-31ல் லண்டனில் காலமாகிவிட்டார்.

o o o

2-10-31ல் மீரத் கல்லூரியில் பண்டித மோதிலால் நேருவின் திருவுருவப்படத்தை டாக்டர் அன்சாரி திறந்து வைத்தார்.

o o o

லங்காஷைரில் 1930-ம்வருஷமுதல்மூடிக் கிடந்த இரண்டு பெரிய மில்கள் மீண்டும் வேலை செய்யத் தொடங்கி யிருக்கின்றன.

o o o

ஸ்ரீமான் ஜி. டி. பிர்லா சர்வகட்சி மகாநாட்டின் சிறுபான்மைக் கமிட்டியில் ஓர் அங்கத்தினராயிருக்கும்படி நியமிக்கப்பட்டிருக்கிறுர்.

o o o

எகிப்திய அரசாங்கத்தாரும் ஈராக் அரசாங்கத்தாரும் ஒன்று சேர்ந்து அராபிய பாஷையில் புதியதோர் அகராதியைத் தயாரித்து வருகிறுர்களாம்.

o o o

ஸ்பெயின் தேசத்திலிருந்து கோவேறு கழுதைகள் ஏற்றுமதி செய்யப்படக்கூடாதென்று ஸ்பெயின் அரசாங்கத்தார் உத்திரவிட்டிருக்கின்றனர்.

o o o

சர்வதேச விஷயங்களைப்பற்றிப் பிரெஞ்சு மந்திரிமார்களைக் கண்டு பேச, பிரிட்டிஷ் அந்நிய மந்திரியாகிய லார்ட்ரெடிங் 6-10-31ல் பாரிசுக்குச் சென்றுர்.

o o o

ஸ்பெயின் குடியரசுப் பார்லிமெண்டில் 23 வயதுக்கு மேற்பட்ட ஸ்திரீகளுக்கு வாக்குரிமையுண்டு என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

o o o

பெஷாவர் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் காரிய தரிசியாகிய மௌலானு கன்மீர் ஹிலாலி என்பார் 124ஏ பிரிவுப்படி கைது செய்யப்பட்டிருக்கிறுர்.

o o o

மியோட்மியோ ஜில்லாவிலுள்ள அல்லன்மியோ என்னும் கிராமத்தில் 27-9-31-ல் கலகக்காரர்கள் புகுந்து, சுமார் 27 வீடுகளுக்கு நெருப்பிட்டுவிட்டார்களாம்.

o o o

பர்ஷியா தேசத்து இளவரசரின் ருஷியா விஜயத்தை யொட்டி, ருஷியாவிலுள்ள எல்லாப் பர்ஷியக் கைதிகளையும் சோவியத் அரசாங்கத்தார் விடுதலை செய்வர்.

o o o

இளைஞர்களைப்பலாத்கார இயக்கத்தில் சம்பந்தப்படாமல் தடுக்க சிம்லாவில் ஒரு சங்கம் காணப்பட்டிருக்கிறது. இதற்கு இராஜப் பிரதிநிதியே போஷகராயிருப்பர்.

o o o

சிக்கனத்தை உத்தேசித்து, அஸ்ஸாம் கவர்னர், தமது சம்பளத்தில் 100க்கு 15 வீதமும், நிருவாக சபை அங்கத்தினர்கள் 100க்கு 10 வீதமும் குறைத்துக் கொள்வார்கள்.

o o o

சென்ற 20-9-31ல் கள்ளிக்கோட்டையில் கைதுசெய்யப்பட்ட ஸ்ரீமான் கிரான் சந்திரதாஸ், இதுகாலை ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டிருக்கிறுர். இவர் சென்னையில் இப்பொழுது தங்கியிருக்கிறுர்.

o o o

புதிய வரி விகிதத்தின் பயனுக பெட்ரோல் விலை காலன் ஒன்றுக்கு இரண்டணு விகிதமும் கிரோசின் விலை எட்டு காலன் கொண்ட ஒரு யூனிட்டுக்கு நாலரை அணு விகிதமும் அதிக மாயிருக்கிறது.

o o o

சிக்கனத்தை முன்னிட்டு பர்மா கவர்னர் நூற்றுக்கு 15 வீதமும் நிருவாக சபை அங்கத்தினர்களும், மந்திரிமார்களும் நூற்றுக்கு 10 வீதமும் தங்களுடைய சம்பளத்தில் குறைத்துக்கொண்டிருக்கிறுர்கள்.

o o o

பார்தோலி நிலவரிசம்பந்தமான விசாரணை 5-10-31 முதல் நடைபெறுவதை முன்னிட்டு, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயம் தற்காலிகமாக 3-10-31 முதல் பர்தோலிக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

o o o

லாகூரில் வெளியாகும் "பீபிள்" என்ற வாரப்பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீமான் பிரோஸ் சந்த் என்பார், அந்நிய சம்பந்தச் சட்டப்படி, கோர்ட் கலையும் வரை வெறுங்காவலும், இருநூறு ரூபா அபராதமும் விதிக்கப்பட்டார்.

o o o

சென்ற ஆகஸ்ட் மாதத்தில் ஒரு நாடகத்தில், தடுக்கப்பட்ட ஒரு தேசிய கீதத்தைப் பாடியதற்காக ஸ்ரீமான் எஸ்.எஸ். விசுவநாததாஸ் திருநெல்வேலி ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டால் குற்றஞ் சாட்டப்பட்டு ஜாமீனில் இப்பொழுது விடப்பட்டிருக்கிறுர்.

o o o

பாரிசிலுள்ள பிரெஞ்சு பாங்கியினிடம் ஏற்கனவே 4750 லட்சம் பவுனுக்குத் தங்கமிருக்கவும், இன்னும் ஏராளமான தங்கம் வந்து குவிந்து கொண்டே இருக்கிறது. நியுயார்க்கிலும் பாரிசிலுமாக மொத்தம் 11750 லட்சம் பவுன் தங்கியிருக்கிறது.

## கலம்பகம்

o o o

மதுரை சம்மட்டிபுரம் புட்டுத் தோப்பு கள்ளுக்கடைகளில் 5-10-31 இரவு மறியல் செய்த தொண்டர்கள் ஆயுதந் தரித்த போலீசாரால் சூழ்ந்துகொள்ளப்பட்டு தடியடிப் பிரயோகம் செய்யப்பட்டதாக "சுதேசமித்திரன்" நிருபர் தெரிவிக்கிறுர்.

o o o

மதுவிலக்கை ஆதரிக்க ஆங்காங்குள்ள ஸ்தலஸ்தாபனங்கள் கிராண்டுகள் அளிக்கின்றன என்பது நேயர்களுக்குத் தெரிந்ததே. இங்ஙனம் இனி கிராண்டுகள் அளிக்கக்கூடாதென்று சென்னை அரசாங்கத்தார் ஓர் உத்திரவு பிறப்பிப்பர் என்று தெரிகிறது.

o o o

மோட்டார் வண்டியை வேகமாக ஓட்டியதற்காக பர்மா அப்பாக்கிப் படையைச் சேர்ந்த தளபதி என். ஓ. வில்லிஸ் என்பார் மாண்டலே ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டினுல் 300 ரூபா அபராதம் அல்லது மூன்று மாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டார்.

o o o

விட்லி கமிஷன் சிபார்சுகளை விரைவில் அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமென்று வற்புறுத்த ஸ்ரீமான்கள் என். எம். ஜோஷியும், பி. சிவராவும் 6-10-31 காலை இந்தியா மந்திரியைப் பேட்டி கண்டு பேசினர். இதைப்பற்றி கவனிப்பதாக அவர் கூறினுர்.

o o o

தற்போழ்து ஜர்மன் குடியரசின் தலைவராயிருக்கும் வான்ஹிண்டன்பர்க்கின் வருமானம், முன்னர் கெய்சர் பெற்றுக்கொண்டிருந்த தொகையில் நூற்றுக்கு ஒருபாகம் கூட இல்லையாம். வான்ஹிண்டன்பர்க்கின் வருமானம் சராசரி இரண்டாயிரம் பவுனேயாகும்.

o o o

புனு ஸ்மால் காஸ்கோர்ட்டில் குமாஸ்தாவாயிருந்த ஒருவருடைய பிரேதம் ஓர் அறையில் இருந்தது. இந்த அறையின் வெளிக்கதவு பூட்டப் பட்டுக் கிடந்தது. கதவைத் திறந்து பார்க்கையில், பிரேதம் மிகக் கேவலமான ஸ்திதியில் இருந்தது. போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.

o o o

கல்கத்தா நகரசபையில் தாம் வகித்துவந்த ஆல்டர்மென் பதவியை பாபுசுபாஷ் சந்திர போஸ் ராஜீநாமா செய்துவிட்டாரென்பது நேயர்களுக்குத் தெரியும். இவர் தமது ராஜீநாமாவைத் திரும்பவும் வாபீஸ் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று கல்கத்தா நகரசபையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

o o o

சென்னையில் காந்தி வாரம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஆங்காங்கு வீதிகளில் கதர் விற்கப்படுகிறது. தினந்தோறும் பல இடங்களில் பொதுக்கூட்டங்கள் நடைபெறுகின்றன. தலைவர்கள் காங்கிரஸ் கொள்கைகளையும் அவைகளை அநுபவத்தில் கொண்டுவரவேண்டிய அவசியத்தையும் பற்றிக்கூறிக் கொண்டு வருகிறுர்கள்.

o o o

சென்னை மயிலாப்பூர் நாடார் சங்கம் 27-9-31 ஞாயிற்றுக்கிழமை மாலை 7 மணிக்கு P. T. R. K. நாடாரவர்கள் இல்லத்தில், திரு. S. S. ஆதித்த நாடார் தலைமையில் நடந்தது. திரு. ஜே. எஸ். பொன்னையா நாடாரவர்கள் "பொருளாதார சுதந்தரம்" என்பதைப்பற்றி சுமார் 2 மணி நேரம் பேசினுர்கள் என்று காரியதரிசி தெரிவிக்கிறுர்.

o o o

வங்காள அவசரச் சட்டத்தின் கீழ் 2-10-31ல் கல்கத்தா போலீசார் இரண்டு இளைஞர்களைக் கைதுசெய்தனர். இவரில் ஒருவர் மைமன்சிங் ஜில்லா காங்கிரஸ்கமிட்டியின் தலைவரான ஸ்ரீமான் ஞானேந்திரநாத் மஜூம்தார் என்பாரும், ரசாயன பரிசோதனைக்குரிய சாமான்களை விற்பனை செய்யும் சுதாங்க்ஷு பூஷண பானர்ஜி என்பாருமாவர்.

o o o

3-10-31ல் பம்பாயிலிருந்து புறப்பட்ட "ராவல் பிண்டி" என்ற கப்பலில் சுமார் இரண்டு கோடி ரூபா பெறுமான தங்கம் ஏற்றுமதியாவதைக்கண்டு, பம்பாய் வியாபாரிகள் பலர் திடுக்கிட்டுப் போய், இதனைத் தடுக்க என்ன முறையைக் கையாள்வதென்பதைப்பற்றி 1-10-31ல் காங்கிரஸ் தலைவர் சர்தார் படேலைக் கண்டு பேசிக்கொண்டிருந்தார்கள்.

o o o

உலகத்தின் எல்லாப் பாகங்களிலும் ஏற்பட்டிருக்கும் பொருளாதார நெருக்கடியின் பயனுகப் பாதிக்கப்பட்டிருக்கும் ஏழை மக்களுக்கும், குழந்தைகளுக்கும் அனைவரும் தாராளமாக உதவிசெய்ய வேண்டுமென்றும் பாதிரிமார்கள் இவ் விஷயத்தில் போதிய ஊக்கம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் போப்பரசர் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறுர்.

o o o

ஸ்ரீமான் ஜே. எம். சென்குப்தா நோயாய் இருக்கிறுர். இவர் கடல்யாத்திரை செய்ய வேண்டுமென்றுவைத்தியர்கள் கூறுகிறுர்கள். எனவே, 20-10-31ல் பம்பாயினின்று புறப்படும் "கிராகோவியா" என்ற கப்பலில் புறப்பட்டு வெனிஸ் நகரத்திற்குச் சென்று அங்கிருந்து லண்டனுக்குப் போய் மகாத்மா காந்தியுடன் மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பி வருவார்.

o o o

புதிய வரிகளைத் தன்னகத்துள் அடக்கிக் கொண்டிருக்கும் புதிய வரவு செலவு மசோதாவை 29-9-31ல் ஸர் ஜார்ஜ் ஷூஸ்டர், இந்தியா சட்ட சபையில் கொணர்ந்தனர். அதற்குச் சாதகமாக 57 வாக்குகளும் பாதகமாக 43 வாக்குகளும் அளிக்கப் பட்டன. இது நவம்பர் மாதம் டில்லியில் நடைபெறும் சட்ட சபைக்கூட்டத்தில் வாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும்.

o o o

மௌலானு மஸ்ஹார் அலியும் அவரைச் சேர்ந்த 144 தொண்டர்களும் 4-10-31ல் சியால் கோட்ஜில்லாவைச் சேர்ந்த கூலோவாலி கிராமத்தில் கைசெய்யப்பட்டார்கள். இவர்கள் காஷ்மீர சமஸ்தானத்திற்குள் செல்ல முயன்றுர்கள். சியால்கோட் ஜில்லா அதிகாரி இவர்களைத் தடுத்துக் கலைந்து போகுமாறு கூறினுர். இவர்கள் மறுக்கவே கைது செய்யப்பட்டார்கள்.

o o o

இந்தியா அரசாங்கத்தாருக்கும் காந்தியடிகளுக்கும் ஏற்பட்ட இரண்டாவது உடன்படிக்கையின்படி பார்தோலி விசாரணை 5-10-31ல் பார்தோலியில் ஸ்ரீமான் ஆர். ஜி. கார்டன் அவர்களால் தொடங்கப்பட்டது. காங்கிரஸ் சார்பாகவும் கடேதார்கள் சார்பாகவும் ஸ்ரீமான் பாலுபாய் ஜே. தேசாய் ஆஜராகியிருக்கிறுர். அரசாங்கத்தார் சார்பாக அரசாங்க வக்கீல் ஆஜராயிருக்கிறுர்.

o o o

பர்மா பிரிவினை சம்பந்தமாக நியமிக்கப்பட்டுள்ள கமிஷனில் ஸ்திரீகள் அங்கத்தினராகச் சேர்க்கப் படவில்லை யென்பதைக் கண்டித்து பர்மிய ஸ்திரீகள் சங்கத்தார் ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கின்றனர். அப்படி ஸ்திரீகள் சேர்க்கப் படாவிட்டால், மற்றப்பிரதிநிதிகள்,கமிஷனையும் பிரிட்டிஷ் சாமான்களையும் பகிஷ்கரிக்க வேண்டுமென்று மேற்படி தீர்மானங் கூறுகிறது.

o o o

தற்போதுள்ள பிரிட்டிஷ் மந்திரிசபை இந்த வாரத்தில் கலைந்து விடுமென்றும், இது சம்பந்தமாக 7-10-31ல் பிரதமமந்திரி சக்ரவர்த்தியைக் காண்பார் என்றும், இவர் இனி தேசத்தாருக்கு விடுக்கும் ஒரு செய்தியை ஆதாரமாகக் கொண்டு ஒரு பொதுத் தேர்தல் நடைபெறுமென்றும், அக்டோபர் மாதம் 28 அல்லது 29-ந் தேதி தேர்தல் நடைபெறக் கூடுமென்றும் தெரிகின்றன.

o o o

திருநெல்வேலி ஸ்ரீமான் காந்திமதிநாதன் என்ற காங்கிரஸ் தொண்டர் 4-10-31-ல் காலஞ்சென்றுர் என்று அறிந்து பெரிதும் விசனிக்கிறோம். இவர், சென்னையில் நீல்சிலை சத்தியாக்கிரகம் நடைபெற்றபோது அதில் சிறந்த தொண்டாற்றி வந்தார். அப்பொழுது கைதிசெய்யப்பட்டு செக்சற்பட்டு இளைஞர் சிறையில் நான்கு ஆண்டுகள் கழித்தார். விடுதலைபெற்றதும் க்ஷய ரோகத்தால் வருந்தி அதனுலேயே இறந்துபோனுர்.

o o o

3-10-31ல் ஸர்ஜான் சைமன் ரேடியோ மூலம் அமெரிக்கர்களுக்கு இந்தியப் பிரச்னையைப்பற்றி நிகழ்த்திய ஒரு சொற்பொழிவில், ஹிந்து-முஸ்லீம் பிரச்னையை வெளியார் வந்து தீர்த்து வைப்பதனுல் அஃது அவ்வளவு நிரந்தரமானதா யிராதென்றும், சுதேச மன்னர்களும், தாழ்ந்த வகுப்பாரும் தனிப்பட்ட ஒரு நிலையில் இருக்கிறுர்களென்றும், இவர்களுடைய பிரச்னைகளைத் தீர்த்து வைப்பது சுலபமான காரிய மல்லவென்றும் குறிப்பிட்டார்.

o o o

வங்காளத்திலுள்ள ஹிஜ்லியில் அரசியற் கைதிகள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டதும், இதைப்பற்றித் தகுந்த விசாரணை நடத்தாவிட்டால் தாங்கள் உண்ணாவிரதத்தை அநுஷ்டிக்கப்போவதாக ஆங்குள்ள கைதிகள் கூறி, அப்படியே அநுஷ்டித்து வந்ததையும் நேயர்கள் அறிவார்கள். வங்காள அரசாங்கத்தார் இப்பொழுது விசாரணை நடத்த ஒத்துக்கொண்டு விட்டதால் இவர்களும் உண்ணாவிரதத்தை நிறுத்திக் கொண்டார்கள்.

o o o

காந்தியடிகள் இங்கிலாந்துக்குச் சென்று கொண்டிருந்தபோது அவரை சி. ஐ. டி. போலீசார் பாதுகாவல் புரியவேண்டுமென்று கூறப்பட்டபோது அடிகள் பின் வருமாறு கூறினுராம் :— "சமூக வாதிகளோ, கலகக்காரர்களோ வேறு யாரேனும் என்னுடைய உயிரை விரும்பினுர்களானுல் அவர்கள் தாராளமாக எடுத்துக்கொள்ளலாம். இந்தியாவின் சுதந்திரத்திற்காக நான் அளிக்கக்கூடியது என் உயிர் ஒன்றுதான். ஆண்டவன் தான் எனக்குத் துணை"

o o o

நூலுக்கு விதிக்கப்பட்டிருக்கும் விசேஷ வரியை ரத்து செய்து விடவேண்டுமென்றும், கைத்தறி நெசவுத் தொழில் அழியாமல் பாதுகாக்கப்பட வேண்டுமென்றும், இந்திய மில்கள், 20-ம் நெம்பர் நூலுக்குக் குறையாமலேயே புடவைகளை உற்பத்தி செய்ய வேண்டுமென்றும் அதை மீறி உற்பத்தி செய்தால் நூற்றுக்கு 15 வீதம் காப்பு வரி விதிக்கப்பட வேண்டுமென்றும் 5-10-31ல் பம்பாய்ச் சட்ட சபையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

o o o

காஷ்மீர் மகாராஜாவின் 36-வது பிறந்த தினத்தை யொட்டி, எல்லா அரசியல் கைதிகளும், இராஜ்யத்திற்கு விரோதமாகக் குற்றஞ் செய்தவர்களும் விடுதலை செய்யப்படுவார்களென்றும், போலீசாருக்கும் இராணுவத்தாருக்கும் விசேஷ அதிகாரங்கள் அளிப்பதாகச் சமீபத்தில் விடுத்த விசேஷ அறிக்கை வாபீஸ் வாங்கிக்கொள்ளப்படுவதாகவும், ஸ்ரீநகரத்தில் பாது காவலுக்காக வைக்கப்பட்டிருந்த விசேஷத் துருப்புகள் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்படுமென்றும் ஓர் அறிக்கை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

o o o

திருச்சூர் சர்க்கார் ஹைஸ்கூலில் ஏழாவது வகுப்புக்கு மேல் படிக்கும் சுமார் நூறு மாணுக்கர்கள், காந்தியடிகளின் பிறந்ததினக் கொண்டாட்டத்தில் கலந்துகொண்டதற்காக 5-10-31ல் சஸ்பெண்டு செய்யப்பட்டிருக்கிறுர்கள். ரஜா எடுத்துக்கொண்டவர்களும் ரஜா எடுத்துக்கொள்ளாமல் நின்றவர்களும் இதே தண்டனை விதிக்கப்பட்டார்கள். "பிள்ளைகளின் கார்டியன்கள், இனிப்பின்னைகள் இத்தகையபொதுச்சம்பவங்களில் கலந்து கொள்ளமாட்டார்களென்று தலைமை ஆசிரியர் மூலம் டைரெக்டருக்கு உறுதி மொழியளிக்கவேண்டும்" என்று சஸ்பெண்டு நோட்டீசில் காணப்பட்டிருக்கிறது.

o o o

சைனுவுக்கும் ஜப்பானுக்கும் ஏற்பட்டிருந்த தகராறு இன்னும் முடிவு பெற்றதாகத் தெரியவில்லை. சர்வதேச சங்கத்தார் இவ் விஷயத்தில் ஒருவித சமரஸம் செய்து வைக்க முயன்றும் பயனில்லை. சென்ற வாரத்தில் மூக்டென் நகருக்கு அருகாமையில் சீனத் துருப்புகளுக்கும் ஜப்பானியத் துருப்புகளுக்கும் பெரும் போராட்டம் நடைபெற்றதாகவும், பாகோஷு என்ற ஊருக்கு ஜப்பானியத் துருப்புகள் அனுப்பப்பட்டிருப்பதாகவும் செய்திகள் கூறுகின்றன. கியுசங் என்ற ஊரில், ஜப்பானியத் துருப்புகள் ஆகாய விமானங்களிலிருந்து வெடி குண்டுகள் எறிந்ததன் பயனுக 200 பேர் இறந்து போயினர்.

o o o

30-9-31ல் கொழும்புத்துறை முகத்திற்கு "பெட்ரோ கோமஸ்" என்ற ஒரு போர்த்து கேசியக் கப்பல் வந்தது. போர்த்துகல் தேசத்தில் ஏற்பட்ட அரசியல் குழப்பத்தில் சம்பந்தப்பட்டிருந்த காரணத்திற்காகச் சுமார் 350 பேர் தேசப்பிரஷ்டதண்டனை விதிக்கப்பட்டு மலேயா தீபகற்பத்திலுள்ள டைமர் தீவுக்கு இந்தக் கப்பலில் கொண்டு போகப்படுகிறுர்கள். ஆனுல் இந்தக் கப்பல் போர்ட் செட் துறைமுகத்திற்கு வந்து கொண்டிருந்தபோது, ஏழு கைதிகள் கப்பலிலிருந்து குதித்து, நீந்திக் கரையேறிப் போய்விட்டார்கள். எனவே, கப்பல் கொழும்புத் துறைமுகத்திற்கு வந்திருந்தபோது, பாதுகாப்பு ஏற்பாடுகள் பலமாக இருந்தன.

o o o

சிக்கனத்தை முன்னிட்டு அரசாங்கத்தார், வேலையில்லாதவர்க்குக் கொடுக்கப்பட்டு வந்த படிச் செலவில் ஒரு பாகத்தைக் குறைத்து விட்டதால் இங்கிலாந்திலும் ஸ்காட்லாந்திலும், ஏழை மக்களுக்கு அதிக அதிருப்தி ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. படிச் செலவு குறைக்கப்பட்டதைக் கண்டிப்பதற்கறிகுறியாக 1-10-31-ல்கிளாஸ்கோநகரத்தில் ஐம்பதினுயிரம் பேர்கொண்ட ஓர் ஊர்வலம் நடைபெற்றது. இவர்களைப் போலீசார் தாக்கவேண்டியதாயிற்று. இதனுல் பலர்க்குக் காயம் ஏற்பட்டது. காமன்ஸ் சபை அங்கத்தினரான ஸ்ரீமான் மாக்கவர்ன் என்பார் உட்பட பதினெரு பேர் கைதுசெய்யப்பட்டனர். மீண்டும் 2-10-31ல் பெருங் குழப்பம் நடைபெற்றது. 49 பேர் கைது செய்யப்பட்டனர்.

மீன்கள், பூச்சிகள், விஷ ஜந்துக்கள் ஆகிய இவைகளில் சில வர்க்கங்கள் எப்பொழுதும் தூங்குவதே யில்லையாம்.

* * *

ரோமாபுரிக்கு அருகாமையிலுள்ள ஓர் ஊரில் அட்டிலோலிசானே என்பார் 245 மணிநேரம் விடாமல் நாட்டியஞ் செய்து கொண்டிருந்தாராம்.

சாலி - 1854, கலி - 5033, ஆங்கிலம் - 1931, பிரசோற்பத்தி௵ புரட்டாசி மாதப் பஞ்சாங்கம்

| ஆங்கிலம் | தமிழ் | வாரம் | திதி | நக்ஷத்திரம் | யோகம் | கரணம் | சூரிய உதயம் | அஸ்தமனம் | விசேஷங்கள் |
| --- | --- | --- | --- | --- | --- | --- | --- | --- | --- |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |

| | | | |
| --- | --- | --- | --- |
| | | | குரு |
| | | | |
| | | | |
| சனி | | அங் | சுக்-கேது-பு |

கிரக பாத சாரங்கள்

சூரியன்.—24உ 43-29க்கு சித்திரை 1-ல்.
28உ 4-51க்கு ,, 2-ல்.
குஜன்.—25உ 42- 6க்கு விசாகம் 2-ல்.
30உ 5-46க்கு ,, 3-ல்.
புதன்.—23உ 34- 8க்கு அஸ்தம் 3-ல்.
25உ 36- 5க்கு ,, 4-ல்.
28உ 28-17க்கு சித்திரை 1-ல்.
30உ 17-22க்கு ,, 2-ல்.
அஸ்தம் 4-ல்.
குரு.—
சுக்.—24உ 38-22க்கு சித். 3-ல் அஸ்தா.
27உ 16-29க்கு சித்திரை 4-ல்.
29உ 58-27க்கு சுவாதி 1-ல்.
சனி.— பூராடம் 2-ல்.
ராகு.— உத்திரட்டாதி 3-ல்.
கேது.— அஸ்தம் 2-ல்.

பாலகணிதர்,
சு. பே. முத்து ஜோதிடர்,
321, ஐரோட், திருவல்லிக்கேணி, சென்னை



# அன்புக்கு வசப்படாதார் யார்?

## காந்தியடிகளிடத்தில் மரியாதை

### பிரிட்டிஷாரின் உற்சாகம்

ஸ்ரீமான் மகாதேவ தேசாய் லண்டனிலிருந்து எழுதியுள்ள ஒரு கடிதத்தில் பின் வருமாறு குறிப்பிடுகிறார்:—

பம்பாயில் காந்தியடிகள் வந்திறங்கினால் அங்கு ஜனங்கள் அவரைத் தரிசிக்க எப்படித் திரள் திரளாகக் கூடிக் காத்துக்கொண்டிருப்பார்களோ அப்படியே தான், கிங்க்ஸ்லி மண்டபத்திலும் காலை முதல் இரவு வரை ஜனங்கள் கும்பல் கும்பலாகக் கூடிக்கொண்டிருக்கிறார்கள். ஸ்திரீகள், புருஷர்கள், குழந்தைகள் ஆகிய அனைவரும் நூற்றுக்கணக்காக நின்றுகொண்டு, 'எப்பொழுது காந்தியடிகள் வரப் போகிறார், அவரை எப்பொழுது பார்ப்போம்' என்று ஆவலுடன் நிற்கிறார்கள். நாங்கள் வெளியே செல்லத் தொடங்கினால், குழந்தைகள் எங்களுடன் தொடர்ந்து வருகின்றன. எங்களுடன் சிநேகிதம் செய்து கொள்ளவேண்டுமென்பதே அவைகளின் நோக்கம். ஸ்ரீமான் தேவதாஸ் காந்தியைப் பார்த்து "உங்கள் தகப்பனார் எப்பொழுது இங்கிலாந்து மன்னரைப் பார்க்கப் போகிறார்"? என்று ஒரு குழந்தை கேட்கிறது. "எங்களைப்போல் தான் உங்கள் தேசத்திலுள்ள குழந்தைகளும் இருக்கின்றனவா?" என்று இன்னொன்று கேட்கிறது. "இவர்களுடைய உடையைப் பார்த்தால் மிகவும் விநோதமாயிருக்கிறது" என்று ஒரு சிறு பெண் தன் தோழியிடம் கூற, அத்தோழி "நாமும் அவர்களுக்கு விநோதமாகவே இருப்போம்" என்று பதில் சொல்கிறது. "உங்கள் நிஜார் எங்கே?" என்று மற்றொரு பையன் குறும்பாகக் கேட்கிறான்.

காந்தியடிகள் இங்கிலாந்து சென்ற பிறகு அவரிடத்தில் எல்லாக் கட்சியாரும் அன்புடனேயே நடந்து கொண்டு வந்திருக்கின்றனர். இது காரம் அவருக்கு விரோதமாயிருந்த பத்திரிகைகள் இப்பொழுது அவரைப்பற்றிப் படங்கள் முதலியன வெளியிட்டிருக்கின்றன. அது மாத்திரமல்ல, சாதாரண சில்லரை சாமான் விற்பவர்களும், மற்றெல்லாப் பாமர ஜனங்களும், காந்தியடிகளின் மோட்டார்வண்டி நின்றதும் அவரைப் பார்க்கவேண்டுமென்று கும்பல் கும்பலாகக் கூடி விடுகிறார்கள். இவரைப் பார்த்தவுடன் புன்சிரிப்புடன் கைகொட்டி ஆரவாரம் செய்கிறார்கள்.

தவிர, ஐரோப்பா கண்டத்தின் பல பாகங்களிலிருந்தும் இங்கிலாந்தின் பல பாகங்களிலிருந்தும், காந்தியடிகளுக்கு வரவேற்பு அளித்து அவருடைய கொள்கை சித்தியாகுமாறு பிரார்த்திப்பதாக ஏராளமான கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன. அடிகள், இங்கிலாந்தில் மாணுக்கராயிருந்த காலத்தில் அவருடன் பழகிய பல பழைய நண்பர்கள், அவருடைய நட்பை மீண்டும் புதுப்பித்துக்கொள்ள அவரை வந்து கண்டு பேசிவிட்டுப் போகிறார்கள். இங்ஙனம் வந்து பார்ப்பவரில் ஐ. சி. எஸ். உத்தியோகஸ்தர்கள் பலரும் உண்டு. ஒருநாள் அடிகள் மௌன விரதத்தை அநுஷ்டித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது ஸர்ஜார்ஜ்பர்ன்ஸ் என்பார் அவரைப்பார்த்து, வேறொன்றும் பேசாமல் அவருடன் கைகுலுக்கிவிட்டு வெளியே வந்தார். வெளியே வந்தபோது "அவருக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று கூறினார். ஞாயிற்றுக்கிழமைகளில் தத்தம் இடம் வந்து தங்கும்படி பல இடங்களிலிருந்து அழைப்புக் கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன.

### நன்கொடை

ஓர் அன்பர் ஐம்பது பவுனுக்குச் செக் ஒன்று அனுப்பிப் பின்வரும் கடிதமொன்றையும் அனுப்பினார்:—

"சென்ற சனிக்கிழமை 'நண்பர்கள் சங்கக்' கூட்டத்தில் நீங்கள் நிகழ்த்திய சொற் பொழிவையும், அமெரிக்காவுக்கு ரேடியோ மூலம் அனுப்பிய செய்தியையும் நான் மிகுந்த உற்சாகத்துடன் படித்தேன். அவைகளில் அடங்கிய கருத்துக்கள் மிகுந்த அழகாகவும், பரந்த நோக்கமுடையவைகளாகவும் இருக்கின்றன. உலகத்திலுள்ள எல்லாரும் அவைகளை அறிந்து நடப்பார்கள் என்று நம்புகிறேன். இந்தியா விஷயத்தில் நான் நீண்ட நாளாகக் கவனஞ் செலுத்தி வருகிறேன். ஐரோப்பிய யுத்தகாலத்தில், இங்கே ஆஸ்பத்திரிகளில் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருந்த யுத்தவீரர்கள், டாக்டர்கள் முதலியவர்களை உபசரித்திருக்கிறேன். உங்களிடத்திலும், உங்களுடைய உபதேசங்களிலும் எனக்கு அநுதாபம் இருக்கிறதென்று காண்பிக்கும் பொருட்டு இதனுடன் அனுப்பியிருக்கும் தொகையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சர்வகட்சி மகாநாட்டில் நீங்கள் பிரசன்னமாயிருப்பதனால் அதன் வேலைகள் சுலபமாக முடியும் என்று நான் கருதுகிறேன்."

### தொழிலாளரின் நல்லுணர்ச்சி

லங்காஷைரிலிருந்து ஓர் அன்பர் எழுதியுள்ள கடிதத்தில் பின் வருமாறு குறிப்பிடுகிறார்.

"லங்காஷைர் பருத்தித் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளியாகிய நான், இந்திய காங்கிரஸ் தலைவர்களின் செயலால் பாதிக்கப்பட்ட போதிலும் ஸ்ரீமான் காந்தியினிடத்தில் அதிக மரியாதையுள்ளவனாக இருக்கிறேன் என்பதைச் சொல்ல வேண்டுமா? லங்காஷைரிலுள்ள என்னுடைய சகோதரத் தொழிலாளர்கள் பலரும், என்னைப்போலவே ஸ்ரீமான் காந்தியினிடத்தில் பக்தி விசுவாசம் கொண்டவர்களாயிருக்கிறார்கள்."

காந்தியடிகளின் பரிசுத்தமான இயக்கம் லங்காஷைர் முதலிய எல்லாப் பிரதேசங்களிலும் நன்கு பரவியிருக்கிறதென்பதற்கு உதாரணமாக லங்காஷைர் வாசி ஒருவர் எழுதியுள்ள கடிதத்தைக் கீழே தருகிறேன்:—

எங்களுடைய மதுபான வியாபாரத்தின் பயனைக் கொடுமையாக நடத்தப்பட்டவரும், அந்த மதுபானத்திலேயே ஈடுபட்டிருப்பவருமான இந்தியர்களுக்கு மாத்திரம், தலைவராயிருக்கும்படி கடவுள் உங்களை நியமிக்கவில்லை. எங்களுடைய பெரிய தலைவரும் நீங்கள்தான். நீங்கள் உண்மையான கிறிஸ்தவர். ஏனெனில் மற்றவர் அனைவரும் மதுபானப் பேய்க்கு வசப்பட்டிருக்கின்றனர். நான் மதுவிலக்கில் மூழ்ந்து நிற்பவன். நீங்கள் எப்பொழுதேனும் ராச்டேலுக்கு வந்தீர்களானால், அங்கு எந்தக் கூட்டம் நடைபெற்றபோதிலும், அதில்நான் மதுவிலக்கைப்பற்றிச் சிறிது பேசாமலிருப்பதில்லை என்பதைக்காண்பீர்கள். மதுவிலக்கேசிறந்தபரிகாரமென்றும், ஸ்ரீமான் காந்திதான் உண்மையான கொள்கையை எங்கும் நிலை நிறுத்தக் கூடியவர் என்றும் நான் சொல்லிக் கொண்டு வருகிறேன். நான் கூட்டங்களுக்குச் செல்லும்போது "காந்தியடிகள் சீடர் வருகிறார்" என்று ஜனங்கள் கூறுவதுண்டு. உண்மையில் தங்களுடைய பூட்ஸை அவிழ்க்கக்கூட எனக்கு யோக்கியதையில்லை. இங்கிலாந்திலுள்ள மதுபானக் கடைகள் எப்படி நடைபெறுகின்றன? மில் தொழிலாளர்கள் அதிகமாகக் குடிப்பதனாலேயே இவை ஓங்கி வளர்கின்றன. இவர்கள், தங்களுடைய கூலியைச் சம்பாதித்துக் கொண்டு வந்து இந்த மதுபானக் கடைகளில் செலவழித்து விடுகிறார்கள். பின்னர், தாங்கள் உற்பத்தி செய்யும் துணிகளை இந்தியர்கள் வாங்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள்! கடைசியாக நான்





மில்லா திருப்பதைக் கண்டு நீங்கள் அஞ்சுவதைப் போல் நானும் அஞ்சுகிறேன். திடீரென்று நம்கையில் அதிகாரம் வந்து விடப் போவதில்லை. உண்மையிலேயே நமக்கு அதிகாரம் கொடுக்கப் படவேண்டு மென்று அரசாங்கத்தார் உத்தேசிப்பாரானால், நாணயப் பரிவர்த்தனை போன்ற விஷயங்களில் அவர்களுடைய மனோபாவம் மாறி யிருக்க வேண்டும். வரவு செலவு நிர்வாகம் ஜனப் பிரதிநிதிகள் கையில் இல்லாமல், எந்த விதமான சுயஆட்சியும் பயன்படாதென்பதைக் காங்கிரஸ் நன்கு உணர்ந்திருக்கிறது. பாதுகாப்பு, வெளி நாட்டு விவகாரங்கள், பண நிர்வாகம் ஆகிய இவைகள் விஷயத்தில் பூரண அதிகாரம் கொடுக்கப்படாத பட்சத்தில் சுயேச்சையானது பயனற்றதென்று காங்கிரஸ் கருதி அங்ஙனமே எனக்குக் கட்டளையும் இட்டிருக்கிறது. இந்த உரிமைகளை அநுபவியாத எந்த அரசாங்கமும் சுய ஆட்சி பெற்றதாகக் கூறமுடியாது. இந்தியாவிலே வியாபாரம் செய்துகொண்டிருக்கும் பிரிட்டிஷ் கம்பெனிகள், தங்களுடைய சுதந்திரங்களை நியாயபூர்வமாக அடைந்திருந்தார்களானால், அந்தச் சுதந்திரங்கள் பாமரஜனங்களின் நன்மைக்கு முரண்படாதிருந்திருக்குமானால், தேசிய அரசாங்கத்தின் கீழ் அவர்கள் எவ்வித அச்சத்தையும் அடையவேண்டியதில்லை. இந்தியாவின் நல்லெண்ணமே அவர்களுக்குச் சிறந்தபாதுகாப்பாகும். பூரண சுதந்திரம் பெற்ற இந்தியாவின் நல்லெண்ணத்தை எந்த அந்நியனேனும் பெற்றுவிட்டால் அவர்கள் எவ்விதத்திலும் அச்சமுற வேண்டுவதில்லை. இத்தகைய பாதுகாப்பு ஒரு விதத்தில் தீமையாகவே முடியும்.

லாகூரில் வகுப்புப் பிரச்னையைப்பற்றிக் காங்கிரசானது நிர்ணயமாகத் தனது அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறது. வகுப்புப் பிரச்னையைப்பற்றி ஒருவித திருப்திகரமான முடிவுக்கு வர மனித முயற்சியனைத்தையும் நான் செலவழிக்கப் பின் வாங்கமாட்டேன். ஆனால் இதற்குப் பலவித தடைகள் இருக்கின்றன வென்பதை நான் உங்களுக்கு ஒளிக்கமுடியாது. நீங்கள், எல்லாச் சமூகத்தாரிடையும் உங்களுடைய செல்வாக்கை உபயோகித்துத் திருப்திகரமான சமரஸத்திற்கு வரத்துணைசெய்வீர்களென்று நம்புகிறேன்."

### பண்டித மாளவியாவின் சொற்பொழிவு

பின்னர் பண்டித மாளவியா பின் வருமாறு பேசினார்:—

"தேசிய அரசாங்கத்தின் கீழேயே கைத்தொழில்கள் அபிவிருத்தி யடையும். தங்களுடைய நிலைமையைப்பற்றி நன்குஅறிந்தவரே இந்தக் கைத் தொழில்களை அபிவிருத்திக்குக் கொண்டு வரமுடியும். இங்கிலீஷ்காரர் இங்கிலாந்தில் கைத் தொழில்கள் சம்பந்தமாக என்னென்ன உரிமைகள் அநுபவிக்கின்றனரோ அதே உரிமைகளை இந்தியர்களும் தங்கள் நாட்டில் அநுபவிக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். சர்வகட்சிமகாநாடு உடைந்து விடாதென்றே நான் கருதுகிறேன். ஒருகால் உடைந்து போய்விட்டால், பின்னர் உண்டாகும் அனர்த்தங்கள் சொல்ல முடியாதன காந்தியடிகள் கூறும் பரிகார முறைகள் அநுஷ்டிக்கப்படுமானால் இருசமூகத்தாரும் என்றும் நிரந்தரமான சமரஸத்துடன் வாழ்தல்கூடும்."

### ஸ்ரீமதி சரோஜனிதேவி சொற்பொழிவு

பின்னர் ஸ்ரீமதி சரோஜனிதேவி பேசுகையில் தேசிய இயக்கத்திற்கு வியாபாரிகள் செய்த உதவியானது மௌனமாக அவர்கள் செய்துவரும் தேசத் தொண்டையே காட்டுகிறதென்றும், ஆயினும் அவர்கள், சொந்த நலனை விடுத்துத் தேசநலனே பெரிதென மதிக்க வேண்டுமென்றும், தாய்நாட்டுச் சேவை செய்வதே பெரிதாகக் கருதவேண்டுமென்றும் கூறினார்.

### நண்பர் சங்கப் பிரார்த்தனை

லண்டனிலுள்ள 'நண்பர்கள் சங்கத்தினர் 30-9-31ல் ஒரு பிரார்த்தனை நடைபெற வேண்டு மென்று ஏற்பாடு செய்திருந்தனர். அதன்படி இப்பிரார்த்தனை அரை மணி நேரம் நடைபெற்றது. மகாத்மா காந்தி, லார்ட் சாங்கே, டாக்டர் எஸ். கே. தத்தர் முதலியோர் உள்பட சர்வகட்சி மகாநாட்டுப் பிரதிநிதிகள் பலர் வந்திருந்தனர். அனைவரும் மௌனமாயிருந்து பிரார்த்தனை நடத்தினர். பிரார்த்தனை முடிந்த பிறகு, லார்ட் சாங்கே மகாத்மா காந்தியுடன் கை குலுக்கிவிட்டுத்தமது சகோதரிக்கு அடிகளை அறிமுகம் செய்வித்தார்.

### இந்திய சமூகத்தினரின் உபசாரம்

லண்டனிலுள்ள இந்திய சமூகத்தினர் 1-10-31ல், கில்ட்ஹாவுசில் ஓர் உபசாரம் நடத்தினர். அதுகாலை, ஓர் உபசாரப் பத்திரமும் 575 பவுன் கொண்ட ஒரு பண முடிப்பும் அளிக்கப்பட்டன. பின்னர் நடைபெற்ற கூட்டத்திற்கு ஸ்ரீமான் வி. ஜே. படேல் தலைமை வகித்து முகவுரையாகப் பேசுகையில், உலகிற்சிறந்த மனிதர் மகாத்மா காந்தியேயென்றும், இந்தியாவில் குழப்பம் நேரிடாதபடி தடுத்துக் கொண்டிருக்கப்பட்டவர் மகாத்மா காந்தியேயென்றும், காங்கிரஸ் கோரிக்கைகள் பூரணமாக நிறைவேற்றப் படாவிட்டால் பின்னர் என்ன நடைபெறுமென்பதைத் தாம் சொல்லமுடியாதென்றுங் கூறினர்.

உபசாரப் பத்திரத்திற்குக் காந்தியடிகள் பின் வருமாறு பதிலளித்தார்:—

"நீங்கள் இப்பொழுது கொடுத்த பணத்தை, இந்தியாவிலுள்ள ஏழை ஜனங்களின் நன்மைக்காகப் பயன்படுத்துவேன். அந்த ஏழை மக்களின் நிலை மிகவும் பரிதபிக்கத் தக்கதாயிருக்கிறது. உண்மையான சுயராஜ்யம் என்னவென்றால், ஏழை மக்களுக்கு முதலில் அவர்களுடைய வீட்டில் வேலை தேடிக் கொடுப்பதேயாகும். கைராட்டினம் ஒன்றுதான் அவர்களுக்கு நிரந்தரமான ஒரு வருமானத்தைத் தேடிக்கொடுக்குஞ் சக்தியுடையதாகும். அரசாங்கத்துடன் போர் நிகழ்த்திக்கொண்டிருக்க வேண்டுமென்பது காங்கிரசின் நோக்கமல்ல. ஆனால் விருப்பமில்லாதவர் வசத்திலிருந்து, சுதந்திரத்தைப் பெறும் பொருட்டு அது போர் நிகழ்த்தச் சிறிதும் பின்வாங்காது. ஆனால் காங்கிரசானது, நிர்மாண வேலையைச் செய்து கொண்டிருக்கிறது. உதாரணமாக, மதுவிலக்கு, தீண்டாமை ஒழிவு ஆகிய துறைகளில் அது அதிக முற்போக்கை அடைந்திருக்கிறது. ஆனால் இத்துறைகளில் பூரணமான வெற்றியடைவதற்கு, இந்தியா, எல்லா அமிசங்களிலும் பூரண நிருவாகத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

இந்தியா சுமந்துவரும் இராணுவச் செலவைப்போல் உலகத்தில் வேறெந்த நாடும் சுமக்கவில்லை. காங்கிரஸ் இலட்சியங்கள் வெற்றியடைய வேண்டுமானால் அது, அஹிம்சா தர்மத்தின் மூலமாகவும் சத்தியத்தின் மூலமாகவுமே நிறைவேற வேண்டுமென்பதைநிரூபிக்கவே நான் இங்குவந்திருக்கிறேன். இவ் விஷயத்தில், இந்தியாவிலுள்ள பாமரஜனங்கள் அனைவரும் அஹிம்சாதர்ம வழியைப் பின்பற்றி நடந்திருக்கிறார்கள். இது விஷயத்தில், காங்கிரசானது தவறிவிட்டால், இந்தியா சுயராஜ்யம் பெற்றும் பெறாததுபோலவேயாகும்.!'

அரசாங்கத்தார், தங்களுடைய கொள்கையை ஏதேனும் ஒருவிதமாகத் தீர்மானித்துக் கொண்டு, அதை உடனே வெளியிடவேண்டும். சர்வகட்சி மகாநாட்டின் பயனை ஏதேனும் விளையுமென்று கருதி, பிரதிநிதிகள், காலவரையின்றிக் காத்திருக்கப் போவதில்லை. நான் இங்கிருப்பதனால் எவ்விதப் பயனும் உண்டாகாதென்று தெரிந்தவுடன் இங்கிலாந்தைவிட்டு அகலவேண்டுமென்றெனக்குஉத்திரவுகிடைத்திருக்கிறது.

பின்னர், காந்தியடிகளை நோக்கிப் பல கேள்விகள் கேட்கப்பட்டன. அவைகளுக்கு அவர் அளித்த பதிலின் சாரம் வருமாறு:—

சுயேச்சையென்றால், பிரிட்டனிடமிருந்து பிரிந்துபோவது என்று பொருளல்ல; இருசமூகத்தாரும் சம அந்தஸ்தில் பங்காளிகளாயிருப்பதென்பதே பொருள். ஆனால் இருசாராரில் யாரேனும் ஒரு சாரார் விரும்பினால் பிரிந்து போகலாம். ஏகாதிபத்தியத்தினின்று பிரிந்து போவதென்றால்; சம அந்தஸ்தினின்று பிரிந்து போவதென்று பொருளல்ல.

சுதேச சமஸ்தானப் பிரஜைகளின் பிரதிநிதிகள்எவரும் சர்வகட்சி மகாநாட்டுக்கு நியமிக்கப்படாமலிருப்பது வருந்தத்தக்கது. ஆனால் அவர்களின் பிரதிநிதியாக என்னை நினைத்துக் கொண்டிருக்கிறேன். என் சக்திக்கியன்ற அளவு என் கடமையை நிறைவேற்ற முயல்வேன்.

மறைமுகமாகத் தேர்தல் நடைபெறவேண்டுமென்று நான் ஏன் கூறுகிறேனென்றால், வயது வந்தவர்கள் அனைவருக்கும் வாக்குரிமை யளிக்கவேண்டுமென்ற தத்துவம் அதன் மூலமாக அங்கீகரிக்கப்பட்டு விடும் என்பதற்கேயாகும்.

கூட்டம் முடிவடையுந் தருணத்தில், காந்தியடிகளின் கொள்கைகளுக்கு விரோதமான சிலர் குழப்பம் விளைவிக்க முயன்றனர். ஆனால் விபரீத சம்பவம் ஒன்றும் நடைபெறவில்லை.

### எதிர்க்கட்சித் தலைவருடன் சந்திப்பு

காமன்ஸ் சபையில் இப்பொழுது எதிர்க்கட்சித் தலைவராயிருக்கும் ஸ்ரீமான் ஆர்தர் ஹெண்டர்சனை, காந்தியடிகள் 1-10-31-ல்காமன்ஸ்சபை அறையில் பேட்டிகண்டுபேசினர்.

### காமன்ஸ் சபையில் சொற்பொழிவு

பார்லிமெண்டிலுள்ள எல்லாக் கட்சி அங்கத்தினர்களின் கூட்டமொன்றில் 1-10-31-ல் பண்டித மதன்மோகன மாளவியாவும், ஸ்ரீமதி சரோஜனி தேவியும் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். பண்டிதர் பேசுகையில், இங்கிலாந்தில் தற்போது ஏற்பட்டிருக்கும் பொருளாதார நெருக்கடி ஒருவாறு நீங்கிவிடுமென்று தாம் நம்புவதாகவும், பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் இந்தியாவுக்கு வந்து ஆங்குள்ள கிராமங்களைப் பார்வையிடவேண்டுமென்றும், தன்னால் என்ன செய்ய முடியும் என்பதைக் காட்ட இந்தியாவுக்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்கவேண்டு மென்றும், இந்தியர்கள் சுயராஜ்யம் பெற்றால் அதனால் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் பரஸ்பரம் நன்மை யுண்டாகுமென்றும் குறிப்பிட்டார்.

ஸ்ரீமதி சரோஜனி தேவி பேசுகையில், உண்மைக் கிறிஸ்தவர்கள் என்ற முறையில், தங்களுக்குப் பிறர் என்ன செய்யவேண்டுமென்று விரும்புகிறார்களோ அதையே பிறர்க்கும் அவர்கள் செய்யவேண்டுமென்றும், தேசிய வாழ்வு சீர்குலையாதிருக்க வேண்டுமானால், சிறுபான்மை சமூகத்தினரின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டு மென்றும், அவர்களுடைய உரிமைகளை வழங்க இந்தியா எப்பொழுதும் சித்தமா யிருக்கிறதென்றும், இந்தியாவின் சுதந்திர உரிமை அங்கீகரிக்கப் படா விட்டால், இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் நிரந்தரமான வேற்றுமை ஏற்பட்டு விடுமென்றும் கூறினர்.

### அடிகளின் பிறந்தநாட் கொண்டாட்ட விழா

சுயேச்சைத் தொழிற் கட்சியார், காந்தி சங்கத்தார், காங்கிரஸ் லீக் ஆகிய அனைவரும் சேர்ந்து, காந்தியடிகளுக்கு, அவருடைய 63-வது பிறந்த தினக் கொண்டாட்டத்தை முன்னிட்டு ஒரு விருந்து நடத்தினர்கள். இந்த விருந்தில் பழங்களே உபயோகிக்கப்பட்டன. பார்லிமெண்ட் அங்கத்தினர் உட்பட பலர் இவ்விருந்துக்கு வந்திருந்தனர். சுமார் முந்நூறு பேர் இந்த விருந்துக்கென்று ஆறு பென்ஸ் வீதம் கொடுத்து உதவினர்கள்., விருந்தில் பிரசன்னமா யிருந்த காந்தியடிகள், வேறெதையும் எடுத்துக் கொள்ளாமல் வெறும் ஆட்டுப்பாலை மட்டும் பருகினர்.

ஸ்ரீமான் தாரா, அடிகளுக்கு ஓர் உபசாரப் பத்திரம் படித்துக் கொடுத்தார். ஸ்ரீமான் பூரி, கைராட்டின மொன்றை அளித்தார். விருந்துக்குத் தலைமை வகித்த ஸ்ரீமான் பென்னர் பிராக்வே, "எது வரினும் வருக. இந்தியாவின் சுயேச்சையைக் கோரி நிற்கும் காங்கிரசின் துணையாக நாங்கள் எப்பொழுதும் இருப்போம்" என்று உறுதி கூறினர்.

காந்தியடிகள் பின்னர் பேசியதன் சாரம் வருமாறு:—

"அரசியல் வானம் கறுத்திருக்கிறது. ஆனால் மீண்டும் போராட்டத்தைத்தொடங்க நாங்கள் சித்தமாயிருக்கிறோம். அவசியமானால் எங்களுடைய இரத்தப் பிரவாகம் கங்கா நதியைப் போல் ஓடும். ஆனால் நாங்கள் யாரோடு போர் செய்து கொண்டிருக்கிறோமோ அவர்களில் ஒருவருக்குக்கூட தீங்கிழைக்க மாட்டோம். உங்களுடைய கஷ்டங்களையும், நீங்கள் செய்துள்ள தியாகங்களையும் நான் நன்றாக உணர்ந்திருக்கிறேன். ஆனால் இந்தியாவுக்குச் சுயேச்சை கொடுக்க வேண்டுமென்று நீங்கள் கூறி வருவீர்களானால், இன்னும் அதிகமான தியாகங்களைச் செய்ய வேண்டி யிருக்கும். காங்கிரஸ் திட்டத்தில் உங்களுக்குள்ள நம்பிக்கையை நீங்கள் மீண்டும் வற்புறுத்திக் கூறியதால், என்னுடைய பொறுப்பை நீங்கள் சிறிது குறைத்தவர்களாவீர்கள். இங்கிலாந்தில் இந்தியாவைப் பற்றி அறியாமை குடிகொண்டிருந்த போதிலும், இந்தியாவின் நலனை நீங்கள் பாதுகாப்பீர்களென்ற நம்பிக்கை எனக்குண்டு. இங்கிலாந்துக்கு நான் வந்த பிறகு எனக்கு எங்கணும் அன்பான உபசரிப்பே நடந்து வந்திருக்கிறது. இதற்காக அனைவருக்கும் நான் பெரிதும் வந்தன மளிக்கிறேன்."

### பெண்மக்களின் உபசரிப்பு

லண்டனிலுள்ள இந்திய ஸ்திரீகள் சங்கம், சரோஜ நளினி தத்த ஞாபகச் சங்கம் ஆகிய இச்சங்கங்களின் ஆதரவில், மத்தியஒய். எம். சி. ஏ. கட்டிடத்தில், அடிகளின் பிறந்த தினத்தை யொட்டி ஒரு கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீமதி பிரஜலால் நேரு தலைமை வகித்தார். அடிகளுக்கு 165 பவுன்கொண்ட ஒரு பண முடிப்பு அளிக்கப்பட்டது.

காந்தியடிகள் பதிலளிக்கையில், சென்ற வருஷத்துச் சட்ட மறுப்புப் போராட்டத்தின்போது, இந்திய ஸ்திரீகள் மகத்தான தியாகங்களைச் செய்திருக்கிறார்களென்றும், இந்தியாவின் மதிப்பு, உலகத்தின்கண் முன்னர் அதிகமாயிருக்குமே யானால் அஃது, இந்திய ஸ்திரீகளின் தியாகத்தாலேயே யாகுமென்றும் கூறினர்.

ஸ்ரீமதி சரோஜனி தேவி பேசுகையில், ஸ்திரீகளின் உரிமைகளைப் பாதுகாப்போரில் காந்தியடிகளே தலை சிறந்தவர் என்று கூறினர்.

### அடிகளின் தேக நிலை

டாக்டர் முத்து, சென்ற வாரம் மகாத்மா காந்தியைப் பரிசோதனை செய்து பார்த்து, அவர் மிகுந்த நல்ல நிலைமையில் இருக்கிறாரென்றும், இப்பொழுது அவர் ஏற்றுக்கொண்டிருக்கும் அதிக பொறுப்பினால் அயர்ச்சி அடைந்துவிடவில்லை யென்றும், ஆயினும் சிறிது ஜாக்கிறதையா யிருத்தலே நலமென்றும், இதயமும் சுவாசப்பையும் நன்றாகவே வேலை செய்து வருகின்றனவென்றும் கூறினர். இங்கிலாந்தின் சீதோஷ்ண ஸ்திதியை உத்தேசித்து, அவருடைய ஆகார விஷயங்களில் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன.

### மாணுக்கர்கள் உபசரிப்பு

லண்டனிலுள்ள இந்திய மாணுக்கர்கள் 29-9-31ல் ரெம்பிராண்ட் அறையில் மகாத்மா காந்திக்கு ஓர் உபசாரம் நடத்தினர்கள். அப்பொழுது அடிகள் நீண்டதொரு பிரசங்கம் செய்யவில்லை. ஆனால் மாணுக்கர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் அளித்துக்கொண்டு வந்தார். லண்டனிலுள்ள இந்திய மாணுக்கர்கள் எந்தவித உடையை அணிய வேண்டுமென்று கேட்டதற்கு, ஐரோப்பிய உடைகளையே அணிய வேண்டுமென்றும், தம்மைப்போல் ஆடை அணிந்து கொள்வது முட்டாள்தனமாகுமென்றும், ஏழை ஜனங்களின் பிரதிநிதியாகவே தாம் இந்த ஒற்றை யாடையை அணிந்து கொண்டிருப்பதாகவும் அடிகள் பதில் கூறினர்.

கராச்சி காங்கிரஸ் தீர்மானத்திற்கும் லாகூர் காங்கிரஸ் தீர்மானத்திற்கும் முரண் இருக்கிறதென்று ஒருவர் சுட்டிக் காட்டினர். அதற்கு அடிகள் பதிலளிக்கையில், லாகூர் தீர்மானத்தில் பங்காளிகளாயிருக்கும் நிலையைப்பற்றிக் குறிப்பிடப்படவில்லை யென்றும், ஆனால் ஒருசுதந்திரதேசமே பங்காளியாயிருக்க முடியுமென்றும், தாம் ஏகாதிபத்தியத்திற்குள் இருக்க விரும்பவில்லை யென்றும், ஆனால் கிரேட் பிரிட்டனுடன் சம அந்தஸ்தை வகிக்கும் இந்தியாவையே விரும்புவதாகவும், ஏகாதிபத்திய முறைக்குள் இந்தியா அடங்குவதையே தாம் விரும்பவில்லை யென்றும், கிரேட் பிரிட்டனும் இந்தியாவும் ஒன்று சேர்ந்து, எவ்வித ஆயுதங்களும் இரத்தச் சிந்தலுமின்றி உலக சமாதானத்தைப் பாதுகாத்துக்கொண்டிருக்க வேண்டுமென்பதே தமது நோக்கமென்றும், தம்முடைய இந்தக் கோரிக்கைகள் சித்தியடைய முயற்சி செய்யப் போவதாகவும் கூறினர்.

### காண்டர்பரிக்கு விஜயம்

3-10-31 முற்பகல் 11-45 மணிக்குமகாத்மா காந்தி தமது பரிவாரத்துடன் காண்டர்பரி வந்து சேர்ந்தார். சென்ற வாரம் முழுவதும் செய்த அதிக வேலையின் பயனை, பிரயாணம் முழுவதும் அடிகள் அயர்ந்து நித்திரை புரிந்தார். அன்று பிற்பகல், தலைமைப் பாதிரியின் வாசஸ்தலத்தில் மற்ற பாதிரிகளைக் கண்டு பேசினர். ஸ்ரீமான் சி. எப். ஆண்ட்ரூஸும் இங்கே தங்கியிருக்கிறார்.

அன்று மாலை காண்டர்பரி மாதா கோயிலில் நடைபெற்ற தெய்வப் பிரார்த்தனையில் காந்தியடிகளும் கலந்து கொண்டார். அங்கு மேடைமீது தலைமைப் பாதிரியுடன் இவர் அமர்ந்திருந்தார். பிரார்த்தனை முடிந்ததும் தலைமைப் பாதிரியான ஸ்ரீமான் ஜான்ஸன் வாச ஸ்தலத்திற்கு அவருடன் சென்று விட்டார். 4-10-31 பிற்பகல் மூன்று மணிக்கு அடிகளுடைய மௌன விரதம் தொடங்கியது. அதற்கு முன்னர் தலைமைப் பாதிரியுடன் நீண்டநேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்தார். காண்டர்பரியிலேயே அடிகளுக்கு ஓய்வு கிடைத்தது. இதே மாதிரி ஒவ்வொருவாரமும், ஓய்வெடுத்துக் கொள்வதற்குத் தகுதியான இடங்கள் அமைத்துக் கொடுக்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

### ஒரு பாதிரியாரின் பாராட்டுதல்

4-10-31-ல் லண்டன் நகர ஆலயத்தில் டாக்டர் கார்வுட் என்ற ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் சொற்பொழிவு நிகழ்த்துகையில் பின்வருமாறு குறிப்பிட்டார்:—

காந்தி என்ற இந்த மனிதர் என்னைப் பெரிதும் கவர்ந்துவிட்டார். இவர்ஒருபெரிய கொள்கையைக் கைக்கொண் டிருக்கிறார். இந்தியாவின் ஜனத்தொகையிலே 25 கோடி பேர் ஒரு வேளைச் சோற்றுக்கே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆயினும், இவர்கள் சோரியாதை ஆன்ம சக்தியால் அடைந்துவிடலாமென்று இந்தக்காந்தி தைரியமாகக் கூறுகிறார். என்ன மனோதிடம்! நமக்கும் இந்த இந்தியக் கொள்கை சிறிது இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்! உலகத்திலே பல தீமைகள் இருக்கின்றன. அவைகளுள் இராணுவத்திமிரும் ஒன்று. இத்தகையவைகளை ஆன்ம சக்தியாலேயே வெல்ல முடியும். ஸ்ரீமான் காந்தி, இயேசுநாதரைப் பல அமிசங்களில் ஒத்திருக்கிறார். ஆயுத பலமின்றி. எவ்வித ஸ்தாபனத்தின் துணையுமின்றிக் கிறிஸ்து நாதர் உலகத்தை எதிர்த்து நின்றார். பரம தரித்திரர்களான இருபத்தைந்து கோடி ஜனங்களின் சார்பாக ஒரு சிறிய ஜீவன், ஒரு பெரிய ஏகாதிபத்தியத்தின் நடுவே நின்று பேசுவது, முற்காலத்தில், கிறிஸ்து நாதர் உலகிடைத்தோன்றிப் பேசியதைப்போலவே இருக்கிறது.

### பிரதிநிதிகளுடன் பேட்டி

சுதேச சமஸ்தானப் பிரஜைகளின் பிரதிநிதிகளான ஸ்ரீமான்கள் எம். வி. அபயங்கார், சேத் ஆகிய இருவரும் 5-10-31ல் லண்டன் வந்து சேர்ந்து உடனே காந்தியடிகளைக் கண்டு நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தனர்.

# காந்தியடிகள் பிறந்த நாட் கொண்டாட்டம்

## நாடெங்கணும் திருவிழா

### சென்னை

காந்தியடிகளின் '63-வது பிறந்த தினத்தை யொட்டி 2-10-31ல் சென்னையின் பல பாகங்களில் ஊர்வலங்களும் பஜனைகளும் நடைபெற்றன. அநேக இடங்களில் ஏழைகளுக்கு அன்னமளிக்கப்பட்டது. கோயில்களில் அர்ச்சனைகள் செய்விக்கப்பட்டன. அன்று மாலை காங்கிரஸ் மண்டப மைதானத்தில் ஸ்ரீமதி ருக்மணி லட்சுமிபதி தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் கூடியது. அப்பொழுது அவர் முகவுரையாகக் கூறியது வருமாறு:—

உலகத்திலே இப்பொழுது காந்தியடிகளைத் தெரியாதவர்கிடையாது. இப்பொழுது அவரே உலகிற் சிறந்த புருஷராக விளங்குகிறார். இந்தியாவின் நிலையோ தற்போது மிக நெருக்கடியாயிருக்கிறது. இதன் கோரிக்கள் ஈடேற வேண்டுமென்று இதுகாலை அவர் இங்கிலாந்துக்குச் சென்றிருக்கின்றார். கதர், தீண்டாமைவிலக்கு, மதுவிலக்கு ஆகிய இம்மூன்றையுமே இவர் முக்கியமாகக் குறித்திருக்கிறார். இந்தியா சுதந்திரம்பெறவேண்டுமானால் அதற்கு முன்னர் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை நிகழவேண்டும். இந்த நிர்மாண திட்ட வேலைகளை நாம் அனைவரும் ஒற்றுமையாயிருந்து நடத்துவோமாக.

பின்னர் ஜனாப் யாகுப் ஹஸன் பின் வருமாறு பேசினார்:—

சுமார் பத்து வருஷங்களுக்கு முன்னர் ஒத்துழையா இயக்கத்தை நாம் ஆரம்பித்த போது, ஹிந்துக்களும் முஸல்மான்களும் ஒற்றுமையுடனிருந்து பல அரிய தியாகங்களைச்செய்தார்கள். ஆனால் சுயராஜ்ய உதயத்திற்கு முன்னர் இருசமூகத்தாரும் தனித்தனியாகப் பிரிந்து நிற்பர் என்று அப்பொழுது எவரும் கருதினாரில்லை. இந்த வேற்றுமைக் காட்சியையே, காந்தியடிகளின் 63-வது பிறந்த தினமாகிய இன்று இந்தியாவில் மாத்திரமல்ல இங்கிலாந்தின் தலைநகரான லண்டனிலும் காண்கிறோம். இந்த வகுப்புப்பிரச்னையைத்தீர்த்து வைக்கக்காந்தியடிகள் பெரிதும் முயன்று கொண்டிருக்கிறார்; இவ் விஷயத்தில் சிறிது தளர்ச்சியும் அடைந்திருக்கிறார் என்று தெரிகிறது. ஆனால் பெரியவர்கள் சோர்வுற்ற சமயம் அவர்களுக்கு ஊக்கமளிக்கக்கூடிய ஏதேனும் ஒரு சம்பவம் நடைபெறுமென்று சொல்லப்படுவதுண்டு. அத்தகைய நிகழ்ச்சி யொன்று காந்தியடிகள் விஷயத்தில் நடைபெற வேண்டுமென்று நாம் பிரார்த்திக்கிறோம். இந்திய சமூகத்தை ஒற்றுமைப் படுத்திவைக்கக் காந்தியடிகள் நீண்டநாள் வாழ்ந்துகொண்டிருப்பாராக.

பின்னர் பாங்கிப்பேட்டையைச் சேர்ந்த ஸ்ரீமதி பீடர்சன் என்னும் அம்மையார் பேசுகையில், காந்தியடிகளின் சொல்லுக்கும் செயலுக்கும் வேற்றுமை யில்லாததினாலேயே நாம் அவரைக் கௌரவிக்கிறோமென்றும், நம்மாலான தாய்நாட்டுச் சேவை செய்வதன் மூலம் காந்தியடிகளுக்கு மரியாதை செலுத்துவோமென்றும், குறைந்தபட்சம் கதரையாவது அணியவேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

ஸ்ரீமான் ச. இராஜகோபாலாச்சாரியார் பேசுகையில் காந்தியடிகள் சொல்படி நடப்பதே அவரைக் கௌரவிப்பதாகுமென்றும், நாம் அனைவரும் கதரணிந்து தீண்டாமையை ஒழிக்கவேண்டுமென்றும், காந்தியடிகள் இங்கிலாந்துக்குச் சென்றபிறகு, இந்தியாவுக்குச் சாதகமாகப் பிரிட்டிஷாரின் மனோபாவத்தை மாற்றி வருகிறாரென்றும், அவர் ஒருகால் சீக்கிரம் திரும்பி வந்துவிட்டபோதிலும், அவருடைய விஜயமானது இங்கிலாந்தில் எப்பொழுதும் மறையாமலிருக்குமென்றும், மதுவிலக்குப் பிரசாரத்தை நாம் தீவிரமாகத் தொடர்ந்து நடத்தவேண்டுமென்றும், கள்ளுக்கடை ஏலங்கள் நடைபெற்று முடிவடைந்து விட்டதால், இனி மறியல் செய்ய வேண்டிய அவசியம் வேண்டியதில்லை யென்று எவரும் கருதவேண்டாமென்றும், ஏழை ஜனங்கள் குடித்துக் கெட்டுப் போகாமலிருக்குமாறு நாம் செய்ய வேண்டுமென்றும் கூறினார்.

இந்தப் பிறந்தினக் கொண்டாட்டத்தையொட்டி தாஸன் ஸ்டுடியோகாரர், காந்தியடிகளின் உருவப்படமொன்றைக் காங்கிரஸ் மண்டபத்திற்கு அளித்தனர். ஸ்ரீமான் அரங்காச்சாரியார் என்பார், முருகப்பெருமானுடைய உருவமொன்றையும் அளித்தார்.

### ஸ்திரீகள் கூட்டம்

ஸ்ரீமதி ருக்மணிலட்சுமிபதியின் தலைமையில் காங்கிரஸ் மண்டபத்திற்குள் ஸ்திரீகளின் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. டாக்டர்எஸ். முத்துலட்சுமிரெட்டிபேசுகையில் இந்தியர்களுக்குச் சுதந்திரம்பெற்றுக் கொடுக்கமகாத்மாகாந்தி எல்லாவழியிலும்முயன்று வருகிறாரென்றும் அரசியல் சுதந்திரம் பெறவேண்டுமானால் முன்னர்பொருளாதார சுதந்திரம் பெறவேண்டுமென்றும், அதற்காகவே காந்தியடிகள் நிர்மாண திட்டத்தை வகுத்திருக்கிறாரென்றும், வீட்டுக்கு வேண்டிய சாமான்கள் யாவும் ஸ்திரீகளே வாங்குகிறார்களாதலால், அவர்கள் விரும்பினால் வீடு முழுவதையும் சுதேசி மயமாக்கி விடலாமென்றும், ஸ்திரீ புருஷர் வேற்றுமையின்றி அனைவருக்கும் சுதந்திரம் வேண்டுமென்று மகாத்மா காந்தி கோருகிறாரென்றும் குறிப்பிட்டார். பின்னர் ஸ்ரீமதிகள் அம்முசுவாமிநாதன், இந்திராபாய், ஹில்டாவுட், எல். கிருஷ்ணாபாய் முதலியோர் பேசியதும் கூட்டம் கலைந்தது.

### வேறு கூட்டங்கள்

சென்னை ஆந்திரா ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் 2-10-31 மாலை ஹைகோர்ட்டு கடற்கரையில் ஸ்ரீமான் கத்தே அரங்கைய நாயுடு தலைமையில் ஒரு கூட்டம் கூடியது.

மயிலாப்பூர் ரானடே மண்டபத்தில் காந்தியடிகளின் உருவப்பட மொன்று ஸ்ரீமான் ஆர். என். ஆரோக்கியசாமி முதலியார் அவர்களால் திறந்துவைக்கப்பட்டது. தலைமை வகித்த ஜனாப்ஜமால் முகம்மது பேசுகையில், மகாத்மா காந்தி உலக புருஷரென்றும், இந்தியாவில் தற்போது ஏற்பட்டிருக்கும் எழுச்சிக்கு அவரே காரணரென்றும் நம்முடைய அரசியல் சுதந்திரத்தைப் பெறுவதற்காக அவர் ஓர் உயரிய வழியைக் காண்பித் திருக்கிறாரென்றும், தீண்டாமை விலக்கில் அவர் முன்னின்று உழைப்பது, அவருக்கு உள்ள ஆண்டவன் பக்தியையே காண்பிக்கிறதென்றும், காந்தியடிகளே, இந்தியாவின் பொதுஜன உள்ளத்தைப் பிரதிபலிக்கிறவரென்றும் கூறினார்.

இராயப்பேட்டை காந்தி-இர்வின் சங்கத்தின் ஆதரவில் ஷை சங்கத் தலைவர் ஸ்ரீ சிவத்தியானானந்த மஹரிஷியவர்கள் "மகாத்மா காந்தியின் உள்ளம்" என்னும் பொருள் பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். 32-வது நெம்பர் வீட்டிலிருந்து மகாத்மாவின் படம் திருநாவுக்கரசு நாயனார் தமிழ்வேத பாராயண சபையினரின் தமிழ்வேத கீதத்தோடு 27-வது நெம்பர் கிரகத்திலுள்ள வேதப்ரவசன மந்திரத்துக்குக் கொண்டு வரப்பெற்றது. ஜாதிமத பேதமின்றி எல்லாரும் பாரதமக்களென்பதை யுணர்ந்து, நாட்டுச் செல்வ முன்னேற்றத்துக்கான கைத்தொழில்களை, முக்கியமாக நாட்டு நூற்றலை விருத்தி செய்து எவரிடத்தும் பகைமை பாராட்டாது, மனோபலத்துக்கு மிஞ்சின பலமில்லை யென்பதை உணர்ந்து ஒன்றுபட்டுத் தேசமுன்னேற்றத்துக்காக உழைக்க வேண்டுமென்று நன்றாக உபந்நியசிக்கப் பெற்றது. பின்பு மகாத்மாவின் படத்தை வைத்துக்கொண்டு தமிழ்வேத பாராயண சபையார் பஜனை நடத்தியதன்மேல் ஏழைகளுக்கு அன்னமளிக்கப்பெற்றதென்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

சென்னையில் வேறு பல இடங்களிலும் கூட்டங்கள் நடைபெற்றன.

### பம்பாய்

பம்பாயில் 2-10-31ல் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. சர்தார் படேல் பேசுகையில், சுமார் பதினைந்து லட்சம் ரூபாய் பெறுமான கதர் கையிருப்பு இருக்கிறதென்றும் அஃது இந்தக் காந்தி வாரத்தில் செலவழிந்து போக அனைவரும் முயற்சி செய்ய வேண்டுமென்றும், இதனால் ஆயிரக் கணக்கான பேருக்கு உணவு கிடைக்கக் கூடுமென்றும், அரசாங்கத்தார் அச்சுச் சட்டம் இயற்றியதையும், ஸ்டெர்லிங்கோடு ரூபாயைப் பிணைப்பதையும், புதிய வரிகள் விதிக்கிறதையும் தாம் பெரிதும் கண்டிப்பதாகவும் கூறினார். பின்னரும் அவர் பேசியதாவது:—

"யுத்தம் நேரும்போலிருக்கிறது. தூரத்திலிருந்து யுத்த முழக்கம் கேட்கிறது. மீண்டும் போர் தொடங்கப் படலாம். சமுத்திரத்தின் அக்கரையினின்று அதன் ஓசை இப்பொழுதே கேட்க ஆரம்பித்து விட்டது. இறுதி வரை யுத்தம் செய்வதற்குத் தயார்ப்படுத்திக் கொள்ளுங்கள். தாய் நாட்டின் பொருட்டு எல்லாவற்றையும் தியாகம் செய்யச் சித்தமாயிருங்கள்."

பின்னர் ஸ்ரீமான் கே. நடராஜன் பேசுகையில், காந்தியடிகள் இங்கிலாந்து சென்றிருக்கும் சமயத்தில், தேசத்தில் மிகத் திறமையாக அமைதியைக் காத்துவரும் காங்கிரஸ் தலைவரைத் தாம் பெரிதும் பாராட்டுவதாகவும், இதே மாதிரி அரசாங்கத்தாரும் அமைதியைக் காத்து வந்தால் நன்றாயிருக்குமென்றும், ஆனால் அதற்கு மாறாக அடக்குமுறைச் சட்டங்களையும், புதிய வரித் திட்டங்களையும் உண்டாக்கிக் கொண்டு வருகிறார்களென்றும் கூறினார்.

பின்னர் ஸ்ரீமான்கள் யமுனாதாஸ் த்வாரகதாஸ், கே. எப். நாரிமன், கே. எம். முன்ஷி முதலியோர் பேசக் கூட்டம் கலைந்தது.

### கல்கத்தா

#### கவிஞரின் நற்செய்தி

காந்தியடிகளின் திருநாட் கொண்டாட்டம் கல்கத்தாவில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இந்த நன்னாளை யொட்டி கவிஞர் ரவீந்திரநாத் தாகூர் தேசத்தாருக்குப் பின் வரும் செய்தியை விடுத்திருக்கிறார்:—

"நமது நாட்டில் மூடநம்பிக்கைகளும், அநியாய பத்தியும், வகுப்புத் துவேஷமும், மதவெறியுமே நமக்குப் பெரும் விரோதிகளாக விருக்கின்றன. கடல் கடந்து இங்குவந்து அதிகாரம் செலுத்தும் அன்னியரின் குரோதத்தைவிட மேற்சொன்ன விரோதிகளின் குரோதம் அதிகமாக விருக்கிறது இந்தக் கொடுமைகளை ஒழித்தாலொழிய வாக்குக் கணக்கெடுப்பதாலும் சில சவுகரியங்களுக்காக வாதாடுவதாலும் நமக்குச் சுதந்தரம் கிடைக்கப்போவதில்லை. மகாத்மா நமக்குப் புதிய ஊக்கம் உண்டாகும்படி செய்தார். சுதந்திரத்திற்காக உறுதியுடன் போராடவும் அவர் நமக்கு வழி காட்டினார். அவரது பிறந்ததினமாகிய இன்று நாம் மேற்சொன்ன விஷயத்தை மனதில் கொள்ளுவோமாக. மகாத்மா ஒழுக்க மேம்பாடுடன் ஆரம்பித்திருக்கும் இவ்வியக்கம் சுய நிர்ணயத்துக்கானதொரு இயக்கமானாலும் இவ்வியக்கத்தின் பயனாக இந்தியாவின் கோரிக்கை நிறைவேறுவதற்குத் தடையாகவுள்ள சமூகத்தடைகள் சிலவும் நீங்குவதற்கு இடமாகும்."

அவர், அடிகளாருக்கு விடுத்துள்ளசெய்தி வருமாறு.—

"தங்களுடைய பிறந்த தினமாகிய இந்த சந்தோஷ தினத்திலே எங்களுடைய ஒற்றுமைப்பட்ட அன்பைத் தங்களுக்கு வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்."

மேற்படி பிறந்ததினக் கொண்டாட்டத்தை உத்தேசித்து, கல்கத்தா நகரசபையினர் அடிகளுக்கு ஒரு நற்செய்தி யனுப்பினர். அன்று கார்ப்பொரேஷன் மண்டபத்தின் மீது தேசியக் கொடி நாட்டப்பட்டது. பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டன. காந்தியடிகளின் உருவப்படமொன்று மாணவர்களுக்கு வாங்கிக் கொடுக்க 6,000 ரூபாய் செலவழிக்கப்பட்டது.

### டெல்லி

2-10-31 காலை டெல்லி காந்தி மைதானத்தில் டாக்டர் அன்ஸாரி தேசியக் கொடியேற்ற விழாவை நடத்தினர். பிற்பகல் ஜனாப் அஸப் அலி காந்தி கதர் பந்தர் ஒன்றைத் திறந்து வைத்தார். மாலையில் ஒரு பெரிய ஊர்வலம் நடைபெற்றது. பின்னர் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் ஜனாப் அஸப் அலி, மௌலானா அபுல்கலாம் ஆஸாத் முதலியோர் காந்தியடிகளின் பெருமையைப் பாராட்டிப் பேசினார்கள்.

### காரைக்குடி

காந்தியடிகளின்63-வது பிறந்தினக்கொண்டாட்டவிழாவாரத்தை இந்நகர் சுதேசிய அபிவிருத்திநிலையத்தாரால் 2-10-31 மாலைஆரம்பிக்கப்பட்டது. அவ்வமயம்பாலஷண்முகானந்த சபை சித்திரகவி திரு. மாதவன் அவர்களால் தயாரிக்கப்பட்ட மகாத்மாகாந்தியின் பெரிய திருவுருவம், புஷ்பஹாரங்களாலும்,கதர்மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு மோடாரில் டவுனைச்சுற்றி ஊர்வலமாக வந்தது. ஆட்டுப்பால் ஈச்சம்பழம் முதலியவைகள் வழங்கப்பட்டன என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

### குன்றுகுடி

#### காந்தியடிகள் கருணை நிலயம்

இவ்வூர் அன்பர்களின் நன் முயற்சியால் நாளது பிரஜோற்பத்திவு புரட்டாசிமீ ககஉ (2.10-31) காலை 8 மணிக்கு ஷை நிலயத் திறப்புவிழாவும் மகாத்மாகாந்தியடிகளின் 63-வது பிறந்தினக் கொண்டாட்டமும், பலவான்குடி "சிவநேசன்" ஆசிரியர் திரு. ராம. கு. ராப. இராமஸ்வாமி செட்டியார் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாய் நடைபெற்றது என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

### அறந்தாங்கி

மகாத்மா காந்தியின் 63-வது பிறந்தினக் கொண்டாட்டம் காங்கிரஸ் கட்டளைப்படி இவ்வூர் காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. காலையில் தொண்டர்கள் காங்கிரஸ் கொடிகளுடன் தேசிய கீதங்களைப் பாடிக்கொண்டு ஊர்வலமாகக் காங்கிரஸ் ஆபீஸிலிருந்து புறப்பட்டு முக்கியத் தெருக்கள் வழியாக பஜனை செய்துகொண்டு சென்றார்கள். ஆங்காங்கு கதரின் மகிமையையும் அதனை அணிய வேண்டியதின் அவசியத்தையும் கூடியிருந்த ஜனங்களுக்கு எடுத்துச் சொன்னார்கள்.

இரவு 7 மணிக்கு மகாத்மா காந்தியின் திருவுருவப்படம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. இவ்வூரில் சென்ற ஒரு மாதத்திற்கு மேலாக நடந்துவரும் கள்ளுக்கடை மறியல் காங்கிரஸ் தொண்டர்களால் வெகு சாத்வீகமாகவும் அமைதியாகவும் தினமும் நடந்து வருகிறது. இதன் பயனாக 2-நெம்பர் கள்ளுக்கடை சுமார் 2 வாரமாக மூடப்பட்டிருக்கிறது என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

### மற்ற இடங்களில்

காந்தியடிகளின் பிறந்ததினக்கொண்டாட்டம் பிஜப்பூர், ஆமதாபாத்,காசி, இலட்சுமணபுரி முதலிய வடஇந்தியாவிலுள்ள எல்லா இடங்களிலும் கொண்டாடப்பட்டது. அப்படியே தென்னிந்தியாவிலுள்ள எல்லா இடங்களிலும் கொண்டாடப்பட்டது.

### சர்தார் படேலின் செய்தி

காங்கிரஸ் தலைவராகிய சர்தார் படேல் காந்தியடிகளுக்குப் பின்வருஞ் செய்தியை யனுப்பினார்:—

"அந்நிய ஆட்சி முறையின் கஷ்டத்தால் சகிக்கவொண்ணாத் துன்பங்களை அநுபவித்து வரும் நமது பெரிய தேசத்தினரின் சார்பாகவும், சற்றும் துவேஷமின்றித் தியாகம் செய்து கஷ்டத்தை மேற்கொண்டு விடுதலை பெறுவதே ஒப்பற்றமார்க்கமெனத் தாங்கள் காட்டிய வழியை அநுஷ்டித்து வரும் இந்நாட்டினர் சார்பாகவும், பட்டினியால் வாடினும் தங்களுடைய நாட்டினச் செய்தியால் உற்சாகமும் புதிய நம்பிக்கையும் பெற்றுள்ள கோடிக்கணக்கான இந்தியர் சார்பாகவும் காங்கிரஸ் தலைவர் என்ற ஹோதாவில் நான் தங்களின் 63-வது வருஷப் பூர்த்தி தினமாகிய இன்று தாங்கள் நீடூழி வாழவேண்டுமென்றும், தங்கள் முயற்சி பலிக்க வேண்டுமென்றும் பிரார்த்திக்கிறேன். அதோடு நாட்டின் கௌரவம் தங்களால் பாதுகாக்கப்படுமென்று பூரணமான நம்பிக்கையும் கொண்டிருக்கிறோம்."

## காந்தியடிகளது ஆன்மசக்தி

(திரு. ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை)

அறம்வளர மறம்தளர அரும்பணிகள்
புரியன்பர் அன்னை கீர்த்தித்
திறஞ் செழிக்க இந்நாட்டில்
சிறந்தனர்முன் என்றாலும் சிந்தையாரத்
துறந்த பெரியார்களிலே தொல்பழ
நாட்டுடனே சொல்லும் மேலைப்
பிறகண்டங்களும்பாவும் பெரியார்காந்
தியை அனையார் பிறந்ததுண்டோ? 1.

காலறியாத் திருவுளத்திற் களிப்பினால்
எழுஞ் சிரிப்பைக் கண்டபோது
பாவசராய்ச் செருக்கொழிந்து பலரும்
பெறும் ஆனந்தம் பகரப்போமோ?
இரக்கமதால் வறியதொர் வாழ்வினை
மகிழ்ந்து வலிந்தேற்ற இயல்பைஎண்ணி
விரவுபெருஞ் செல்வர்களும் வித்தக
காந்தியைப் போற்ற விழைகின்றாரே! 2.

இன்றிங்கி லாந்தினிலே இருந்தருளும்
எங்காந்தி எண்ணில் துன்பம்
துன்றும்வறியோர் இன்னல் தொலையஒரு
வழிகண்டு சுகமே மீள
ஒன்றியநற் கருத்தினராய் உண்மையன்பு
மனத்தினராய் ஒளிகொள் ஈசன்
தன்திரு நல்லருள் வேண்டிச்சகலரும்
போற்றிட வொருங்கு சார்மினீரே! 3.

காழ்ப்பறியாக் கருணைமனக் காந்தி
புகழ்ஓங்கிடுக; கயவர் கீழ்மை
வீழ்க கடி(து) இந்தியர்தம்
விசனமெலாம் நீங்கிடுக; வெகுளியின்றித்
தாழ்வொடு நற்பணிபுரியும் சாத்துவிக
தொண்டர் துயர்தாழ்க; தாழ்க
வாழ்கமகான் காந்தி பலவ்ருடங்கள்
இனிதுஇங்கு வாழ்க; வாழ்க.





## வாசவதத்தை

அல்லது

## கனவோ நினைவோ?

[சிதம்பரம் அண்ணாமலை சர்வகலாசாலை உதவி ஆசிரியர் ஸ்ரீமான் எஸ். கே. கோவிந்தசாமி, பி. ஏ. ஹானர்ஸ் அவர்கள் எழுதியது.]

### நாடக பாத்திரங்கள்

உதயணன்: வத்த நாட்டரசன்.
யூகந்தராயணன் (யூகி): உதயணனின் முதலமைச்சன்.
வசந்தன்: உதயணனின் தோழன்.
ஒரு மாணி:
மகத மன்னனின் கஞ்சுகி ஒருவன்:
மகாசேனனின் கஞ்சுகி ஒருவன்:
அரண்மனைச் சேவகர் இருவர்:
வாசவதத்தை: அவந்தி அரசனான பிரச்சோதனனின் மகள் உதயணனின் பெருந்தேவி; அவந்திகை வேடம் தரித்துளாள்.
பத்மாவதி: மகத மன்னனான தருசகன் தங்கை; உதயணனின் இளைய தேவி.
ஒரு சந்நியாசினி:
மதுகரி, பத்மினி: பத்மாவதியின் தோழியர்.
விஜயான்: அந்தப்புர வாசற்காப்போள்.
வசந்தரை: வாசவதத்தையின் செவிலித் தாய்.
பத்மாவதியின் செவிலித்தாய் ஒருத்தி:
சூத்திரதாரன், தவசிகள், ஏவலாளர் முதலானோர்

### முன்னுரை

[சூத்திரதாரன் வருகிறான்.]

சூத்திரதாரன்:—உதித்தெழும் அம்புலிபோற் சிவந்து, கள்ளை யுண்டு துவண்டு, அழகு ததும்பும் பலதேவனுடைய திருக்கரங்கள் நம்மைக் காக்க!

இங்குக்குழுமிய விழுமியோர்க்கு ஒரு விண்ணப்பம்—ஆ! என்ன இது? நான் பேச வாயெடுப்பதற்குள் பெரு முழக்கம்!

[திரையின் பின் பக்கத்தில்]

சூத்திரதாரன்:—விலகுங்கள், விலகுங்கள்! வழியை விட்டு அப்புறம் அகலுமின்! புரிந்தது சமாச்சாரம்; மகத மன்னனின் தங்கை பத்மாவதி வருகிறாள். அவளுடைய பரிசனங்கள் இது தவவனம் என்றும் எண்ணாது அமர்க்களம்—செய்கிறார்கள். தவசிகளையும் விரட்டுகிறார்கள் போல் தோன்றுகிறது.

### முதல் அங்கம்

[இரண்டு சேவகர் வருகிறார்.]

விலகுங்கள், விலகுங்கள்! வழியைவிட்டு அப்புறம் செல்லுங்கள்! (ஒரு ஏழைப் பார்ப்பன வழிப் போக்கன் போல் வேடந்தரித்த யூகந்தராயணனும், அவந்தி நாட்டுச் சாதாரணப் பெண்ணொருத்தி போல் உருமாறின வாசவதத்தையும் வருகிறார்கள்.)

யூகந்தராயணன்:—என்ன, இவ்விடத்திலும் ஆர்ப்பாட்டமா? நன்றாய் இருக்கிறது! மான்மா உரியை உடுத்து, காய்கனி கிழங்கை உண்டு, கானில் வசிக்கும் துறவிகளை இவ்வாறு அலைத்தல் தகாது! தகாது! ஓ, யார் இந்தக் கயவன் கண்மூடித்தனமாய் இந்தத் தவவனத்தில் கலாம் விளைவிப்பவன்?

வாசவதத்தை:—ஐயா, நம்மை விலகு, விலகு என்று சொல்வதற்கு இவன் யார்?

யூகந்தராயணன்:—அம்மா, அவன் தன் கடமையை அறியாக் கடையன்.

வாசவதத்தை:—என்னையும் ஒருவன் அதிகாரம் செய்வதா?

யூகந்த:—அம்மா, தேவர்களும் உருமாறித் தோன்றினால் மக்களால் எள்ளவும் படுவர்; தள்ளவும் படுவர்.

வாசவ:—ஐயோ, வழி நடந்த அலுப்பைக் காட்டிலும் மானக்குறைவு என்னால் தாங்க முடியவில்லை;

யூகந்த:—அம்மணி, கவலை ஒழிக! தாங்கள் பண்ணாத அதிகாரமா? இது என்ன சோர்வு? நாம் உலகில் நுகரும் இன்பமும் படுந் துன்பமும் ஓயாது இயங்கும் உருளை போன்றவை என்பது தங்களுக்குத் தெரிந்ததுதானே.

இரண்டு சேவகர்:—விலகுங்கள், விலகுங்கள்!

[கஞ்சுகி வருகிறான்]

கஞ்சுகி:—நன்றாய் இருக்கிறது உங்கள் நாட்டாமை! நீங்கள் இடமறிந்து வேலை செய்யத் தெரியாத அறிவிலிகள்; உங்களுடைய அடாத செயலால் நம் மன்னர் பெயருக்கும் புகழுக்கும் குறைவு உண்டாகும் போல் இருக்கிறது. இத்தகைய தாழ்மைக் கஞ்சி அன்றோ இச்சாதுக்களெல்லாம் நாடு நகரம் வீடு வாசல்களை வெறுத்துக் காடு போந்துளர்.

இரண்டு சேவகர்:—தெரியாமல் செய்துவிட்டோம். மன்னிக்கவேண்டும்!

யூகந்த:—அவன் ஒருவன் தக்கதிது தகாததிது என்றறிந்தவன் போல் தோன்றுகிறான். குழந்தாய் அவனை அணுகி உசாவுவோம்.

வாசவ:—நல்லது, அய்யா.

யூகந்த:—(கஞ்சுகியை நாடி) ஏனையா இத்தவ வனத்தில் உள்ளாரை எல்லாம் தாத்துகின்றனர்?

கஞ்சுகி:—ஓ, தவசி!

யூகந்த:—(தனக்குள்) தவசி! சிறந்த பட்டம்தான். ஆனால் என் போன்றவர்க்கு அது அவ்வளவு இசைவு இல்லை.

கஞ்சுகி:—பெரியோரே! அதோ அப்பெண்ணரசி எம் மன்னராம் மகத நாட்டதிபதி, தருசகனின் தங்கை. அவள் பெயர் பத்மாவதி. இந்த ஆச்சிரமத்தில் வாழும் கோப்பெருந் தேவியான தன் அன்னையைக் கண்டு பணிந்து விடைபெற்று இராசகிரியம் போக வேண்டியவள் இன்றைய பொழுதை அவள் இவ்விடமே கழிப்பாள். அவளாலோ, அல்லது அவள் தன் பரிசனங்களாலோ தங்களுக்கு யாதொரு தீமையும் விளையாது. தங்களுக்கு வேண்டிய மலரோ, புல்லோ, சுப்பியோ, நீரோ, எது வேண்டுமானாலும் தடையின்றி எடுத்து உபயோகித்துக் கொள்ளலாம். எம் இளவரசி பிறந்த குலம் துறவிகளுக்கு நல் விருந்தாய குலம், அய்யா.

யூகந்த:—(தனக்குள்) இவள்தானோ மகத நாட்டு இளவரசி, பத்மாவதி என்பாள்! புஷ்பகபத்ரகன் முதலான சோதிடரனைவரும் இவளை நம்மரசன் வதுவை செய்து கொள்வன் என்று உறுதி கூறியிருக்கின்றனர். இவ்வழகியை நம் தலைவன் மாலையிட்டுப் பார்க்கவேண்டும் என்ற அவாவினாலே எனக்கு இவள் பால் அன்பும் பெருகுகிறது.

வாசவ:—(தனக்குள்) இவளும் அரசகுலத்துதித்தவள் என்று அறிந்தபின் இவளிடத்தில் எனக்கு ஒரு வகையான ஆசையும் நேசமும் உண்டாகின்றன.

[இளவரசி, பத்மாவதி தன் தோழியர் புடை சூழ வருகிறாள்.]

தோழி:—அம்மா, ஆச்சிரமம் இதுவே. (உள் நுழைகிறார்கள்) அங்கே ஒரு சந்நியாசினி காணப்படுகிறாள்)

சந்நியாசினி:—இளவரசி, நின் வரவு நல்வரவாகுக!

வாசவ:—(தனக்குள்) நல்லவனப்புவாய்ந்தவள்! உயர்குடிக்கொத்த எழில்!

பத்மா:—அம்மணி, வணக்கம்.

சந்நி:—நீண்ட வாழ்நாளோடு இருக்க வேண்டும்! குழந்தாய், இப்படிவா, இக்குடிசை யாவர்க்கும் சொந்தம்.

பத்மா:—அம்மா, தாங்கள் மிகுதி ஒன்றும் சொல்ல வேண்டுவதில்லை. தங்களுடைய அன்பொழுகும் மொழிகளுக்கு அடியேன் என்றும் கடப்பாடுடையேன்.

வாசவ:—(தனக்குள்) இவள் குரல் குழலினும் இனிமை!

சந்நி:—(தோழியைப்பார்த்து) குழந்தாய், நம் அருட்கடலாம் அரசரின் தங்கையான இந்நங்கைக்கு மணம்பேசு மன்னர் யாரேனும் வந்திலரோ?

தோழி:—எத்தனையோ பேர், சின்னாட்களுக்கு முன்பு உஞ்சை நகர் கோமான், பிரச்சோதனன், தம் புதல்வற்கு நம் இளவரசியை வேண்டித் தூதர் சிலரைஅனுப்பினர்.

வாசவ:—(தனக்குள்) நல்லது, இவள் என்னருமை மதனியாகப் போகிறாள்.

சந்நி:—பொருந்திய உறவு, இரண்டும் பெரும்புகழ் பெற்ற, வழுவில்லா அரச குடும்பங்கள்.

பத்மா:—(கஞ்சுகியை விளித்து) ஐயா, இவணுள்ள தவசிகள் அனைவரையும் பணிவொடு இவ்வாச்சிரமத்துக்கு அழைத்து வருவீர். அவர்கட்கு வேண்டியதை வினவி வேண்டியாங்களிப்போம்.

கஞ்சுகி:—அம்மணி, அப்படியே, ஓ, இத்தவவனத்தில் வசிக்கும் தவப்பெரியோரே! சான்றோரே! நான் பணிவுடன் கூறுவதை செவிசாய்த்தருளுங்கள். எம் இளவரசி தங்களை வழுத்த இவண் வந்துள்ளார். தங்கள் அன்புக்கும், அருளுக்கும் பாத்திரமாகக் காத்துக்கொண்டிருக்கிறார். யார் குண்டிகை வேண்டுபவர்? மான் உரி, மர உரி யாருக்கு வேண்டும்? கல்வி கற்று முடிந்த மாணவர் தம் குருவருக்குக் கொடுக்கத்தக்க காணிக்கை வேண்டுமா? எம் இளவரசி துறந்தார்க்குத் துணைவி. எது வேண்டுமென்றாலும் கேட்கலாம். யாருக்கு, என்னென்ன வேண்டும்?

யூகந்த:—(தனக்குள்) ஆ, எனக்கு ஒரு சூழ்ச்சி தோன்றுகிறது. (உரக்க) ஐயா, ஓர் கோரிக்கை.

பத்மா:—நற்காலமாக நான் இத்தவவனத்துக்கு வந்தது வீணாகவில்லை.

சந்நி:—இக்காட்டின் கண் உள்ள தவசிகளுக்கு வேண்டிய பொருள் ஒன்றும் இல்லையே. ஆகையால் இவ்வேண்டுகோள் அயலார் யாரிடமாவது இருந்து பிறந்திருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன்.

கஞ்சுகி:—ஓ, ஐயா! தாங்கள் கோரியது என்னவோ?

யூகந்த:—இதோ இப்பெண் என் தங்கை. இவள் கணவன் தலயாத்திரை சென்றுளான். அவன் திரும்பி வரும் வரை இவளை உம் இளவரசியின் பாதுகாப்பில் வைத்துச் செல்ல விரும்புகிறேன். எனக்கு வேறு துணியேன்? மணியேன்? உம் தலைவி சீலவதியாகத் தோன்றுவதால் என்தங்கையை நிறை வழுவாது பார்த்துக்கொள்வர் என்பது என் துணிபு.

வாசவ:—(தனக்குள்) உம்! யூகி என்னை இவ்விடம் விட்டுவிட்டுப் போக முடிவுசெய்தனர் போலும்; நல்லது இருக்கட்டும். அவர் எதையும் ஆராய்ந்தறிந்தே செய்வர்.

கஞ்சுகி:—அம்மா, இப்பெரியார் வேண்டுகோள் மிகப்பெரிதாய் இருக்கிறது. இதற்கு நாம் இசைதல் எங்ஙனம்?

பத்மா:—"வேண்டுவன வேண்டியாங்கு ஈவேன்" என்று சொன்ன பின்னரும் இவ்வண்ணம் தயங்கல் என் போன்றார்க்கு அழகல்ல. ஆகையால், ஐயா, அவர் விரும்பின படியே நடப்போம்.

கஞ்சுகி:—குடிப்பிறந்தார்க் கொத்தசொல்!

தோழி:—வாழ்க! வாய்ச் சொற்றவறா வனிதை வாழ்க!

சந்நியாசினி:—குழந்தாய், பல்லாண்டு வாழ்க!

கஞ்சுகி:—(யூகந்தராயணனை அணுகி) ஓ, பெரியோரே! எம்தலைவி தங்கள் தங்கையைத் தன்னோடு கூட்டிப்போக உடன்பட்டனர்.

யூகந்த:—என் நன்றி அவருக்கு உரித்தாகுக. செல்வத்தங்காய், நீ இளவரசியிடம் போவாய்.

வாசவ:—(தனக்குள்) என்ன செய்வது! யான் சீர்கேடி! போகிறேன்!

பத்மா:—அம்மங்கை இப்பொழுது நம்மவளாய் விட்டாள்.

சந்நியா:—முகத்தைப்பார்த்தால் அவளும் ஒரு கோமகளாய் இருக்கலாம் என நினைக்கிறேன்.

தோழி:—நானும் அங்ஙனமே நினைத்தேன்.

யூகந்த:—(தனக்குள்) ஆ, பாதிசுமை தீர்ந்தது. நான் எதிர்பார்த்தவாறே முடிந்தது. எம்மரசன் உதயணன் மீண்டும் தான் இழந்த நாட்டைப் பெற்றுச் செங்கோலோச்சும் பொழுது வாசவதத்தையை அவனிடம் சேர்க்கவேண்டும். அவன் தன்னைப் பிரிந்ததிலிருந்து மகதநாட்டு இளவரசியோடு வாழ்ந்து வந்தாளென்று அறிய அவன் அவளைச் சிறு சொல் ஒன்றும் சொல்லான். மேலும் பத்மாவதி அவன் மனைவியாவாள் எனச் சோதிடர் உரைத்துள்ளார். அவர் சொல் பொய்க்கவும் பொய்க்காது; ஊழ்வினையாலும் வெல்லமுடியாது.

[ஒரு மாணி வருகிறான்]

மாணி:—(அண்ணாந்து பார்த்து) உச்சிவேளையாயிற்று. என் கால்களும் சோர்ந்தன. எங்கு சென்று களைப்பாறுவது? (கொஞ்ச தூரம் நடந்து போகிறான்) இது ஓர் ஆச்சிரமம் போல் தோன்றுகின்றது. ஒருபால் மான்கள் கூட்டம் கூட்டமாய் அச்சம் சிறிதுமின்றி மேய்ந்து கொண்டிருக்கின்றன. மரங்களெல்லாம் செவ்வனே நீர் வார்த்து வளர்க்கப்பட்டு, இலை அடர்ந்து, மலர் மலிந்து, காய் நிறைந்து, பழம் சொரிந்து கொண்டு இருக்கின்றன. மற்றொருபால் பசுக்கள் தம் இளங்கன்றுகளோடும் மரநிழலில்படுத்து அசை போட்டுக்கொண்டு இருக்கின்றன. எட்டின தலை மட்டும் உழவு நிலம் ஒரு சாண்கூட காணோம். மரக்கிளைகளினிடையே ஓம குண்டப்புகைமாலை மாலையாக உயர எழுகிறது. மெய்யாக இது ஒரு தவவனமே.

உள்ளே சென்று பார்க்கிறேன். (வனத்துக்குள் நுழைகிறான்) ஓ, அதோ அந்நீண்ட சட்டை அணிந்தவனைப் பார்த்தால் அவனுக்கும் ஆச்சிரம வாழ்க்கைக்கும் வெகுதூரம் போல் தோன்றுகிறது. (மற்றொரு பக்கல் நோக்கி) ஆனால் இதோ சில துறவிகள் கண்ணில் தென்படுகின்றனர். அவர்களிடம் போகலாம்—சே, ஆச்சிரமத்தில் பெண்டிர் வேறு!

கஞ்சுகி:—நாங்களும் சும்மா வரலாம்; ஐயா, ஆச்சிரமம் எல்லோர்க்கும் பொது.

வாசவ:—(அம்மாணியைப் பார்த்து முகத்தை அப்புறம் திருப்பிக்கொண்டு) உம்!

பத்மா:—(தனக்குள்) ஆ, இப்பெண் அயலாரைக் காண அருவருப்படைகிறாள். இவள் நிறை வடுவுபடாமல் காத்தல் அரிதல்ல.

கஞ்சுகி:—ஐயா, நீர் எம் விருந்தினர். ஆகையால் இதைப்பெற்றுக்கொள்ள வேண்டும்.

மாணி:—(தண்ணீரை வாங்கி அருந்தி) போதும், போதும். அப்பா! களை தீர்ந்தது.

யூகந்த:—ஓ, மாணி! எங்கு இருந்து வருகிறீர்? எங்கு இப்பொழுது செல்கிறீர்? உமது சொந்த ஊர் எதுவோ?

மாணி:—சொல்லுகிறேன், ஐயா, நான் பிறந்த பட்டினம் இராசகிரியம். வத்த நாட்டிலுள்ள இலாவாணகம் என்ற ஊருக்கு வேதம் பயில்வதற்காகச் சென்றிருந்தேன்.

வாசவ:—(தனக்குள்) ஆ, இலாவாணகம்! அப்பெயரைக் கேட்டது வெந்ததொரு புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பது போல் இருக்கிறது.

யூகந்த:—பாடம் முடிந்ததா?

மாணி:—இன்னும் இல்லை.

யூகந்த:—ஏன் அரையுங் குறையுமாகத் திரும்பிவிட்டீர்?

மாணி:—அவ்வூரில் அச்சம் தரத்தக்க செயலொன்று நிகழ்ந்துவிட்டது.

யூகந்த:—அச்செயல் யாது?

மாணி:—அவ்வூரில் உதயணன் என்று ஓர் அரசன் இருந்தான்.

யூகந்த:—ஆமாம். நாங்களும் கேள்விப்பட்டிருக்கிறோம். அவருக்கு என்ன?

மாணி:—அவனுக்கு அவந்தி அரசன் செல்வியான வாசவதத்தை என்பாள் மனைவி. உதயணனுக்கு அவள்பால் அளவிலாக் காதல்:—

யூகந்த:—உண்மைதான். பிறகு? பிறகு?

மாணி:—பிறகு என்ன! அரசன் ஒருநாள் வேட்டைக்குச் சென்றிருந்தான். அத்தருவாயில் ஊர் நெருப்புப் பற்றிக்கொண்டது. அக்கொடுந் தீயில் அவள் மாண்டாள்.

வாசவ:—(தனக்குள்) பொய்ச்சாக்காடு, பொய்ச்சாக்காடு! ஐயோ, பாவி நான் இன்னும் உயிரோடிருக்கிறேன்.

யூகந்த:—அதன் பிறகு?

மாணி:—அவ்வரசனுடைய அமைச்சனான யூகந்தராயணன் என்பான் அவளைக் காப்பாற்றச் செல்ல, அவனையும் அத்தீ விழுங்கியது.

யூகந்த:—அவனையுமா? பெரிதும் பரிதாபம்! பிறகு?

மாணி:—வேட்டையினின்றும் மீண்டு வந்த அரசன் அக்கொடுமையைக் கேட்டு ஆற்றுதலனாய், "இந்நெருப்பிலேயே நானும்

வீழ்ந்துஇறந்துஎன்தேவியை அடைவேன்" என வன்சொற் புகல, அங்கிருந்த அமைச்சர் அவனை அத்தகைய செயலினின்றும் தடுக்கப்பட்டபாடு பெரும் பாடாய்விட்டது.

வாசவ :—(தனக்குள்) என் ஆருயிர்த்தலைவர்க்கு என்பால் இருந்த அன்பின் பெருக்கு எனக்கல்லவோ தெரியும்!

யூகந்த :—பிறகு என்ன நடந்தது?

மாணி :—பிறகு அரசன் அங்கே நெருப்பில் கருகிக்கிடந்த தன்தேவியின் அணிகலன்களை எல்லாம் பொறுக்கி, அவைகளைத் தன் மார்போடு மார்பாக அணைத்துக் கொண்டு, ஓ. என்று அலறி மூர்ச்சையானான்:—

எல்லோரும் :—பரிதாபம்! பரிதாபம்!!

வாசவ:—(தனக்குள்) யூகந்த ராயணற்கு இப்பொழுதுதான் மகிழ்ச்சி (பொருமுகிறான்)

தோழி:—இளவரசி, பாருங்கள். இப்பெண் அழுகிறாள்.

பத்மா :—இவள் மெத்த இளகிய நெஞ்சினள் போலும்!

யூகந்த :—உண்மையாகவே, என் தங்கை இரக்கமுடையவள். பிறகு?

மாணி :—பிறகு சிறிது சிறிதாய் அரசனுக்கு, பிரக்ஞை வந்தது.

பத்மா :—(தனக்குள்) நற்காலமாய் அவர் இன்னும் உயிரோடு இருக்கிறார்! அவர் மூர்ச்சையானார் என்று கேட்டவுடன் என் நெஞ்சில் இருள் சூழ்ந்துகொண்டது.

யூகந்த :—பிறகு? பிறகு?

மாணி :—அரசன் எழுந்தான்; அடியற்ற மரம்போல் மீண்டும் வீழ்ந்தான்; கதறினான்; "ஓ. வாசவதத்தை ஓ. அவந்தி அரசி.! ஓ, என்னருமை மாணாக்கி! ஓஓ!" என்று புலம்பினான். பிரலாபித்தான். தன் துணைவனை இழந்த சக்கரவாகப்புள்கூட அவ்வளவு துடிதுடிக்காது. இத்தகைய உண்மைக் காதலனைக் கணவனாய்ப் பெற்ற வாசவதத்தை பெரும்பேறுடையவள். அவள் உடல் தீக்கிரையானால் என்? அவள் உயிர் சிதைவின்றித் தன் நாயகன் சித்தத்தில் இன்னும் குடிகொண்டிருக்கிறது.

யூகந்த :—அங்கு ஆறுதல் கூற அமைச்சர் ஒருவரும் இல்லையோ?

மாணி :—ஆமாம், உருமண்ணுவா என்று ஒருவன் இருந்தான். அவன் அரசன் துயரத்தை மாற்றப் பெரிதும் முயன்று வருகிறான். அவனும் அரசனோடே பட்டினியும் பசியுமாகக் கிடக்கிறான்; பாவம்! ஓயாது அழுது கண்கள் குழிவிழுந்து போயின; அவன் தன் உடையைக்கூட கவனிப்பதில்லை; இரவும் பகலும் இமைகொட்டாது அரசன் பக்கலிலேயே இருக்கிறான். ஒருகால் அரசன் அஞ்ச நேரிடில் அவனும் அஞ்சலில் சந்தேகமே இல்லை.

வாசவ :—(தனக்குள்) உருமண்ணுவா பாதுகாப்பில் என் தலைவர் இருப்பது என் நற்காலமே.

யூகந்த :—(தனக்குள்) ஓ, உருமண்ணுவாவுக்கு என்ன துன்பம்! அவனுக்கு ஓய்வு ஒழிவு என்பது கிடையாது. அவனால்தான் எல்லாம் ஆகவேண்டியிருக்கிறது. (பலமாக) ஆமாம். ஐயா இப்பொழுது அரசன் ஆறுதல் அடைந்திருக்கிறானா?

மாணி:—அது என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் இலாவாணகத்தை விட்டு அமைச்சர்கள் அரசனை வேறு எங்கோ அழைத்துக்கொண்டு போய்விட்டனர். போகையில், அரசன் ஒவ்வொரு விடத்தையும் நோக்கி, "இங்கே அவளோடு நான் சிரித்து விளையாடினேன்; இங்கே அவளோடு பேசி மகிழ்ந்தேன்; இங்கே இருவரும் சண்டையிட்டுக்கொண்டோம்; இங்கேகாங்கள் துயின்றோம்!" என்று விம்மினான். அவன் அகன்றபின் அவ்வூர் அம்புலி இல்லா வானம்போல் பொலிவிழக்க, நானும் புறப்பட்டு வந்தேன்.

சங்கியாசி:—வேற்றுனை இம்மாணியின் உரையினின்று உதயணன் உண்மையாகவே சிறந்த குண சீலனாக இருக்கவேண்டுமென்று புலப்படுகிறது.

தோழி:—இளவரசி, அவ்வரசர் மறுமணம் புரிந்து கொள்வார் என்று எண்ணுகிறீர்களா?

பத்மா:—(தனக்குள்) என் நெஞ்சம் அதைத்தான் அறிய அவாவுறுகிறது.

மாணி:—எனக்குச் செலவு கொடுங்கள், நான் போய்வருகிறேன்.

எல்லோரும்:—ஐயா, சுகமே போய்வாருங்கள் (மாணி போகிறான்)

யூகந்த :—இளவரசியின் உத்திரவைப் பெற்று யானும் சென்று வருகிறேன்.

கஞ்சுகி:—அம்மா, இப்பெரியார் போவதற்குத் தங்கள் உத்திரவை வேண்டுகிறார்.

பத்மா:—அய்யா, தாங்கள் சென்றால் இப்பெண் தனிமையில் வருந்துவாளே.

யூகந்த:—தாங்கள் சகோதரி போல் இருக்கையில் அவளுக்குத் தனிமை என்ன? (கஞ்சுகியைப் பார்த்து) செலவு பெற்றுக்கொள்கிறேன்.

கஞ்சுகி:—நல்லது, ஐயா, மீண்டும் கூடிய சீக்கிரத்தில் சந்திக்கவேண்டும்.

யூகந்த:—அப்படியே கடவுள் அருள் புரிவாராக! (யூகந்தராயணன் போகிறான்)

கஞ்சுகி:—அம்மா, நாழிகையாய் விட்டது, நாமும் நகரத்துக்குப் புறப்படலாம்.

பத்மா:—அம்மையே, நமஸ்காரம்!

சங்கியா:—குழந்தாய், உன் குணத்திற்கிசைந்த குவலயத்தரசனை நாயகனாக அடைவாயாக!

வாசவ :—அம்மையே, பணிகின்றேன்!

சங்கி :—பிரிந்த நாதனை மீண்டும் சீக்கிரம் அடைவாயாக!

வாசவ :— தங்கள் அருள்!

கஞ்சுகி :—எல்லீரும் வாரீர், போவோம். இந்த வழி. அம்மா, இந்த வழி, பறவைகளெல்லாம் தத்தம் கூட்டை அடைந்தன; தவசிகள் மாலை நீராடப் பொய்கைக்குப் போகின்றனர்; ஓமகுண்டங்களின் தீ கொழுந்து விட்டு எரிகின்றது; அதோ கதிரவனும் தன் கதிர்க் கற்றையைச் சுருக்கிக்கொண்டுமேற்கு மலைச் சாரலில் இறங்குகிறான்.

[எல்லோரும் போகிறார்கள்.]

முதல் அங்கம் முற்றிற்று.

## சர்வகட்சி மகாநாடு

### ஹிந்து-முஸ்லிம் பிரச்னை

ஹிந்து-முஸ்லீம் பிரச்னையை ஒருவித சமரஸமாகத் தீர்த்துவைக்கக் காந்தியடிகள் பெரிதும் முயன்று வருகிறார். சர்வகட்சி மகாநாட்டுச் சிறுபான்மைக் கமிட்டியில் டாக்டர் அன்சாரியைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று காந்தியடிகள் கோரியதை முஸ்லீம் பிரதிநிதிகள் மறுத்து விட்டதாகத் தெரிகிறது.

வகுப்புப் பிரச்னையைப்பற்றி, இந்தியப் பிரதிநிதிகளே சமரஸத்திற்கு வந்து விடுதல் நல்லதென்று ஸ்ரீமான் மாக்டோனல்ட், சிறுபான்மைக் கமிட்டிக் கூட்டத்தைத் தொடங்கியபோது கூறியதை யொட்டித் தனியாக ஓர் உபகமிட்டி நியமிக்கப்பட்டது. இந்தக் கமிட்டியின் கூட்டம் செண்ட் ஜேம்ஸ் அரண்மனையில் நடைபெற்றது. கமிட்டிக் கூட்டத்திற்குக் காந்தியடிகளே தலைமை வகித்தார். முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக்குமே தனியான பிரதிநிதித்துவம் கொடுக்கப்படுதல் வேண்டுமென்றும், மற்றவர்களுக்கு காங்கிரஸே பிரதிநிதியாக இருக்குமென்றும் காந்தியடிகள் கூறினர். ஆனால் தாழ்ந்த வகுப்பார், ஆங்கிலோ இந்தியர், கிறிஸ்தவர் முதலியோருக்குத் தனித்தனியான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டுமென்று டாக்டர் அம்பேத்கார், ஸ்ரீமான் பன்னீர் செல்வம், ஸர் தேஜ்பகதூர் சாப்ரு, ஸ்ரீமான் ஏ. இராமசாமி முதலியார் முதலியோர் கூறினார்கள். காங்கிரஸ் சார்பாகத் தாம் இந்தக் கொள்கையை ஏற்க முடியாதென்று காந்தியடிகள் கூறினர். கடைசியில் எவ்வித முடிவும் செய்யாமல் இந்த உபக்கமிட்டிக்கூட்டம் முடிந்துவிட்டது. ஆயினும், காந்தியடிகள் சோர்வின்றி சமரஸ முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். 3-10-31ல் அடிகள் ஸ்ரீமான்கள் சாஸ்திரி, சாப்ரு, ஜெயகர், பண்டித மாளவியா முதலியவர்களுடன் நீண்ட நேரம் சம்பாஷணை செய்து கொண்டிருந்தார். அப்பொழுது ஸ்ரீமான் வி. ஜே. படேலும் பிரசன்னமாயிருந்தார். பின்னர் அடிகள் ஜனாப் ஜின்னாவுடனும் ஸர் முகம்மது ஷாபியுடனும் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்.

வகுப்புப் பிரச்னையைப்பற்றி எவ்வித திருப்திகரமான முடிவும் ஏற்படவில்லை ஒருவித சமரஸத்திற்கு வர மீண்டும் ஒரு பெரிய முயற்சி செய்யப்பட்டு வருவதாகத் தெரிகிறது. 5-10-31 பாதிராத்திரி வரை ரிட்ஸ் ஹோட்டலில், காந்தியடிகள் கனம் ஆகாகான், ஜனாப் ஜின்னா, ஸர் முகம்மது ஷாபி ஆகியோர் பேசிக்கொண்டிருந்தனர். வகுப்புப் பிரச்னையைச் சமரஸமாகத் தீர்த்துக்கொள்ளப் போகிய அவகாசம் வேண்டி, 5-10-31ல் ஐக்கிய அரசியல் திட்ட கமிட்டியானது, பண்டித மாளவியாவின் பிரேரணையின் பேரில் 9-10-31 வரை தள்ளி வைக்கப்பட்டது.

---

சர்வகட்சி மகாநாட்டின் ஸ்திரீ பிரதிநிதிகளாகிய ஸ்ரீமதி சரோஜனி தேவி, ஸ்ரீமதி சுப்பராயன், பீகம் ஷா நவாஸ் ஆகிய மூவருக்கும், லண்டனிலுள்ள இந்திய ஸ்திரீகள் சங்கத்தார் 29-9-31ல் ஓர் உபசாரம் நடத்தினர். ஸ்ரீமதி பிரஜலால்நேரு தலைமை வகித்தார். மூன்று விருந்தினரும் பதிலளிக்கையில், இந்தியப் பொதுஜன வாழ்க்கையில் ஸ்திரீகள் அதிக பங்கெடுத்துக்கொண்டு வந்திருக்கிறார்களென்றும், புதிய அரசியல் திட்டத்தில், தாங்கள் எவ்வித பாதுகாப்பையும் கோரவில்லையென்றும், அப்படிக் கோருவது, தாங்கள் தாழ்ந்தவர்கள் என்று காட்டிக்கொண்டதாகு மென்றும் கூறினார்கள்.

## நாணய பரிவர்த்தனை

### சென்னையில் கண்டனக்கூட்டம்

இந்தியா அரசாங்கத்தின் நாணயப் பரிவர்த்தனை விகிதத்தையும், புதிய வரி மசோதாவையும் கண்டிக்கும் பொருட்டு, எல்லாக் கட்சியினரும் அடங்கிய ஒரு பொதுக்கூட்டம் சென்னைக் கோகலே மண்டபத்தில் ஜனாப் ஜமால் முகம்மது சாயபு அவர்கள் தலைமையில் 3-10-31-ல் நடைபெற்றது. அப்பொழுது அவர் பேசியதன் முக்கிய பாகம் வருமாறு;—

நாணயப் பரிவர்த்தனை சம்பந்தமாக இந்த நாட்டில், கரன்சிரிசர்வ், தங்கநாணயமதிப்பு ரிசர்வ் என்று இருவகை நிதிகளிருக்கின்றன. நாணய நிதியிலிருக்கும் பணம், நோட்டுகளுக்கு நாணயமாகக் கொடுக்கவும், தங்கநிதியிலிருக்கும் பணம் நாணயமாற்று விகிதத்தை நிலைநிறுத்தவும் பயன்பட்டு வருவது வழக்கம். இந்த நிதிகளிலிருந்து, கோடிக்கணக்கான பணம் இந்த நாட்டின் நன்மைக்கேலாத வழிகளில் செலவழிக்கப்பட்டு வருகிறது. இனியும் இதே மாதிரி அரசாங்கத்தார் செய்து கொண்டுபோக நாம் விட்டுவைக்கக்கூடாது. நம் நாட்டார் செலுத்தி வரும் வரிச்சுமையோ தாங்கமுடியாததாயிருக்கிறது. ஆனால் ஜனங்களின் வருமானமோ மிகக் குறைவு. தேச நலனை உத்தேசித்து அரசாங்கத்தார் நிருவாகச் செலவையும் இராணுவச் செலவையும் குறைத்துக்கொள்ள வேண்டும். உலகத்தில் சமாதான உணர்ச்சி பரவிவரும் இவ்வேளையில் இந்நாட்டில் மட்டும் பெரிய இராணுவம் எதற்கு? உத்தியோகஸ்தர்களுடைய சம்பளமும் மிகவும் குறைக்கப்படவேண்டும்.

### நிறைவேறிய தீர்மானங்கள்

பின்னர் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

அநாத பரிவர்த்தனை விகிதத்தை நிலைநிறுத்த அரசாங்கத்தார் செலாவணியில் குறுக்கிடுவது, உயர்ந்த வட்டிக்குக் கடன் வாங்குவது, மாற்றுண்டிகளை விற்பது முதலிய முறைகளைக் கையாண்டு நாட்டிற்கு ஏராளநஷ்டம் விளைவிப்பதையும், ஜனங்கள் எச்சரிக்கையைக் கேளாமல் தங்க நாணய விகித நிதியைக் குறைப்பதையும் சென்னைவாசிகளடங்கிய இப்பொதுக்கூட்டம் பலமாகக் கண்டிக்கிறது. தவிரவும், தங்க ஆதார மதிப்புக் குறைந்து வரும் ஸ்டெர்லிங்குடன் பிணைக்கப்பட்ட மாற்று விகிதத்தை ரூபாய்க்கு இந்தியா மந்திரி யதேச்சையாக நிர்ணயித்திருப்பதும் அழுத்தமாகக் கண்டிக்கப்படுகிறது. இந்நாட்டின் வர்த்தகம் தொழில் நன்மையைப் பாதுகாப்பதற்கான வழியில் ரூபாய்க்கு ஏற்றுமதி இறக்குமதிக்கேற்ற இயற்கையான தங்க மதிப்பு ஏற்படுவதற்குரிய முறைகளை அனுஷ்டிக்கவேண்டுமென்று இப்பொதுக் கூட்டம் இந்தியா அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறது.

ரூபாயின் செயற்கையான பரிவர்த்தனை விகிதத்தைநிலைநிறுத்துவதற்காக அரசாங்கத்தார் தங்க நிதியிலிருந்து பணத்தை எடுப்பது நாட்டின் நன்மைக்கு விரோதமானதென்றும், அதனால் நாட்டின் செலாவணி செல்லாமற் போய் விடுமென்றும் இக்கூட்டம் எச்சரிக்கிறது. தங்க ரிஸர்வில் கை வைப்பதனால் ரிஸர்வ் பாங்கி ஏற்படுவது சிரமமாகு மென்பதையும் இக்கூட்டம் தெரிவித்துக்கொள்ளுகிறது.

இந்தியாவின் பரிவர்த்தனை செலாவணி விஷயமாக இந்தியருக்குப் பூரண அதிகாரமுமிருக்க வேண்டுமென்றும் இக்கூட்டம் பலமாக வற்புறுத்துகிறது.

இந்தியா சட்டசபைக் கூட்டம் நடந்து கொண்டிருக்கையிலேயே அதன் ஆலோசனையைக் கேளாது இந்தியா மந்திரி யதேச்சையாக ரூபாய்க்கு ஸ்டெர்லிங்கு நாணயமாற்று விகிதத்தை நிர்ணயம் செய்ததை சென்னை வாசிகளடங்கிய இப்பொதுக் கூட்டம் கண்டிக்கிறது. அக்கொள்கையை இந்தியப் பொதுமக்கள் வெறுப்பதை மகாத்மாகாந்தி சரியாக எடுத்துக் காட்டியதை இப்பொதுக் கூட்டம் பாராட்டுவதாக அவருக்கு வணக்கமாகத் தெரிவித்துக்கொள்கிறது.

இந்தியா அரசாங்கத்தார் புதிதாக வருமான வரி, அதிகப்படி வரி, தபால் கட்டணம், சுங்க வரிகள் முதலியவற்றை அதிகமாக விதிக்க உத்தேசித்த உபவரி மசோதா கொண்டுவந்திருப்பதை இப்பொதுக் கூட்டம் அழுத்தமாகக் கண்டிக்கிறது. இவ்வரியினால் உள்நாட்டுத் தொழில், வியாபாரம், வர்த்தகம் பலவற்றிற்கும் பாதகம் சேருவதுடன் எல்லா ஜனங்களுக்கும் கஷ்டமதிகரிக்கு மென்று தெரிவித்துக் கொள்ளுகிறது. இராணுவச் செலவிலும், சிவில் நிர்வாகச் செலவிலும் அதிகமாகச் சிக்கனம் செய்து வரவு செலவைச் சரிகட்டவேண்டுமே யல்லாது ஏற்கனவே தாங்க முடியாத வரிப்பளுவினால் தவிக்கும் ஜனங்களுக்கு அதிக வரி விதிக்கக்கூடாதென்றும் அபிப்பிராயப்படுகிறது.

### இந்தியாவிலிருந்து தங்க ஏற்றுமதி

3-10-31-ல் நடைபெற்ற இந்தியா சட்டசபைக்கூட்டத்தில், ஸ்ரீமான் ஆர். கே. ஷண்முகஞ் செட்டியார், இந்தியாவிலிருந்து எவ்வளவு தங்கம் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறதென்பதைப்பற்றிக் கேட்ட கேள்வியும் அதற்கு அரசாங்கத்தார் அளித்த பதிலும் வருமாறு:—

வினா:—செப்டம்பர் 21-ம் தேதிக்குப் பிறகு தனிப்பட்ட நபர்களால் எவ்வளவு மதிப்புள்ள தங்கக் கட்டிகள் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றன? தேசத்திலிருந்து தங்கத்தை ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடுக்க அரசாங்கத்தார் உத்தேசித்திருக்கிறார்களா? அரசாங்கத்தார் நாணயச்செலாவணி அதிகாரிகள் ஹோதாவில் ஸ்டெர்லிங் மதிப்புக்கு அநேகமாக சரியாக இருக்கக்கூடியவிலைக்குத் தங்கத்தை வாங்க உத்தேசித்திருக்கிறார்களா?

விடை :—சென்ற செவ்வாய்க் கிழமை (29-9-30) வரை 50 லட்சம் ரூபா பெறுமான தங்கம் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. பிந்தின இரண்டு கேள்விகளில் குறிப்பிடும் விஷயம் அரசாங்கத்தாரின் ஆலோசனையிலிருந்து வருகிறது. அவ்வளவே, நான் இப்பொழுது கூறமுடியும்.

---

அலிபூரில் கோஷா முறையை அநுசரிக்கும் ஒரு ஸ்திரீ, தன் பெண்களின் விவாகத்தைக் காரணமாகக் கிளத்தி அண்டை அயலாராகிய பலரிடமிருந்து, இரவல் நகைகள் வாங்கி உபயோகித்தவந்தாள். நகைகள் கொடுத்தவர்கள், அவைகளைத் திருப்பிக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். 'இப்பொழுது கொடுக்கிறேன், நாளை கொடுக்கிறேன்' என்று சாக்குப்போக்குச் சொல்லிக்கொண்டே வந்து கடைசியில், தான் இரவல் நகைகளை வாங்கியதே கிடையாதென்று கூறிவிட்டாள். இதனால் இவள்மீது வழக்குத் தொடரப்பட்டு இவளுக்குப் பதினெட்டு மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

o o o

பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்த குஜராத் ஜில்லாவிலிருக்கும் லோஹாவா வென்ற கிராமத்தில் கள்ள நாணயங்களைச் செய்யும் ஒரு தொழிற்சாலையைப் போலீசார் கண்டுபிடித்திருக்கின்றனர். மேற்படி ஜில்லாவில், கள்ள நாணயங்கள் சிலகாலமாகப் பரவிவருவதாகப் போலீசாருக்குத் தெரியவந்தது. இதன்மேல் புலன் விசாரித்துக் கொண்டு மேற்படி கிராமத்திற்குச் சென்று, ஒரு வீட்டைப் பரிசோதனை செய்ய, அங்குக் கள்ள நாணயங்களும், வேறு பல ஆயுதங்களும் அகப்பட்டன. மூன்று முஸ்லீம்களும் இரண்டு ஹிந்துக்களும் கைது செய்யப்பட்டனர். ஒருவர் மட்டும் அகப்படாமல் தப்பித்துக்கொண்டு விட்டதாகத் தெரிகிறது.

o o o

அருக்கியின் பிரதமமந்திரியாகிய ஸ்ரீமான் இஸ்மெட் பாஷாவைக் கொலை செய்ய ஏற்பட்டாயிருந்த ஒரு சூழ்ச்சி திடீரென்று கண்டு பிடிக்கப் பட்டு விட்டது. ஆர்மினிய சதியாலோசனைக் கூட்டத் தாருடைய யோசனையின் பேரில் விராண்ட் என்ற ஒருவர், இவரைக் கொலை செய்வதாக ஒத்துக் கொண்டார். ஆனால் இதனை அறிந்து இவரைப் பிடிப்பதற்குள் தற்கொலை செய்து கொண்டார்.

---





## லைப் இன்ஷியூரென்ஸ்

ஸ்ரீமான் பாலசுப்ரமண்யம் M. A.

(சென்றவாரத் தொடர்ச்சி)

சீடன் :—வீடுகளாகவோ நிலங்களாகவோ பணத்தை மாற்றிவிட்டால் பணம் நமது கையில் சிக்காதல்லவா?

குரு :—ஆம், நமது நிழலென்று ஒன்று இருப்பது அவசியம். குடிசையானாலும் நமதென்று இருந்தால்தான் நலம். நிலங்களும் இருக்கவேண்டும். 'உழுதுண்டு வாழ்வதற்கொப்பில்லை பழுதுண்டு வேறோர் பணிக்கு' என்னும் வாக்கியத்தின்படி எத்தனையோ தொழில்கள் செய்து வரும் மக்கள் தமக்கென்று நிலமிருப்பின் வெகு சந்தோஷத்துடன் வேளாண்மை புரிய ஒத்துக் கொள்வார்கள். வீடுகள் வருஷத்திற்கு வருஷம் மதிப்புக் குறைகின்றன. சிற்சில சமயங்களில் அதிக விலைக்கு விற்கலாமெனினும், வெகுவாய்மதிப்புக்குறைவாகவேகாணப்படுகின்றது. உனக்கே தெரிந்திருக்கலாம், வீடுகள் நாற்பதைம்பதாயிரம் ரூபா செலவழித்துக் கட்டியும் இப்போது இருபத்தையாயிரம் பெறுவதில்லை. மேலும் வீடுகளை விற்பதென்றால் சடுதியில் நடவாது. வீட்டை வாங்குபவர் திருப்தி யடைந்து, விலை குதிர்ந்து, பத்திரங்கள் பூர்த்தியாவதற்குள் வீட்டை விற்க வேண்டிய பிரமேயமும் தவறி விடும். இன்னும் புருஷத்துணையில்லாமல் ஸ்திரீகள் இவ்வேற் பாடுகள் செய்ய வேண்டி நேரிட்டால் எத்தனைக் கஷ்டமாக விருக்கு மென்பதை யூகித்துக் கொள்.

நிலங்கள் இருப்பது ஓர் அணிகலம் போன்றது. ஆனால் மனிதன் இயல்பாகவே சோம்பலுள்ளவன். கஷ்டமில்லாமலே எல்லாம் சித்தமாக வேண்டுமென நினைப்பவன். நிலமிருந்தால் வருஷம் முழுவதும் அதற்காகப் பாடுபட வேண்டும். எரு, நீர், விதை முதலியவற்றைச் சேகரிக்க வேண்டும். ஆட்களை வைத்து வேலையை நடத்தவேண்டும். மழைக்கும் வெய்யிலுக்கும் பிரார்த்தனை செய்ய வேண்டும். மழை அதிகமாய்ப் பொழிந்தால் ஆபத்துகுறைவாக விருந்தால் நஷ்டம் இவைகளையெல்லாம் உத்தேசிக்குமளவில் பட்டணவாசிகளின் பிழைப்பு மேலானதாகத் தெரிகிறது. படிப்புமுடிந்தவுடன்எந்தஆபீஸிலாவது வேலைக்கமர்ந்தால் மாதம் 30,40,50 இப்படிச் சம்பளம் அதிகக்கஷ்டமில்லாமல் கிடைத்துவிடுகிறதென்று தோன்றுகிறது. கிராமவாசிகள் பட்டணங்களிலுள்ள கஷ்டங்களைக் கவனிப்பதில்லை. பணத்தை முதல் தேதி பெறுவது மாத்திரம் அவர்களுக்குப் புலப்படுகிறது. ஆகையால் நிலங்களை ஒன்றுக்குப் பாதியாகவாவது விற்றுப் போட்டுப் பட்டணங்களில் குடியேறுகிறார்கள். அநேக நிலங்கள் இப்படிப் பாழாய் விடுகின்றன. நிலங்களும் வீடுகளைப் போல வருஷத்திற்கு வருஷம் மதிப்புக் குறைவடைகின்றன. விற்பதில் வீடுகளைப் போலவே கஷ்டமிருக்கின்றது. நஷ்டமும் காலதாமதமும் ஏற்படுகின்றன. அவசரத்திற்குப் பணம் வேண்டு மென்றால் கிடைக்காது.

சீடன்:— சரி, தற்போது எத்தனையோ நிதிகள் உளவே. அவைகளில் பணத்தைப் போட்டுவைத்தால் பணத்திற்கு மோசமில்லை. வட்டியும் கிடைக்கு மென்கிறார்களே.

குரு:— ஆம், நிதிகளே தேசத்திற்கு அணிகலம். நிதி யென்பதற்கு அழியாப் பொருள் எனறு அர்த்தம் சொல்லலாம். இதற்கு ஆங்கிலத்தில் பாங்கு என்று சொல்லுகிறார்கள். இப்பதத்தின் அர்த்தத்தை நோக்கின் வியப்பைக் கொடுக்கும். 'பாங்கு' என்பது ஆற்றங்கரை. ஆற்றங்கரையில் ஆறு மணலைக் கொட்டுகிறது. தண்ணீர் ஓடிக் கொண்டேயிருக்கிறது. அதுபோல் பணம் ஓடிக் கொண்டே யிருக்கிறது. சிறிது மிச்சமானது கரையில் நிற்கிறது. இம்மிச்சமான பணமே நிதியில் இருப்பது. ஜனங்களுக்குத்தற்போது அவசியமில்லாதது [illegible] பொதுவாக நலம் பயக்கிறது. நிதிகள் ஜனங்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் வியாபாரம். எல்லோரும் மாதம் இவ்வள வென்று நிதிகளில் பணத்தைச் சேர்த்து வந்தால் அப் பணத்தை வியாபாரத்திற்காகச் செலவு செய்து அவ்வியாபாரத்தினின்றும் வரும்லாபத்தை ஜனங்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பது எல்லோருக்கும் அனுகூலம். உதாரணமாக ஒரு பட்டணத்தை யெடுத்துக் கொள்வோம். அதில் எட்டு லக்ஷம் ஜனங்கள் இருக்கிறார்கள். குழந்தைகளையும் வருவாயில்லாதவர்களையுந் தள்ளிவிட்டால் மூன்று லக்ஷம் பேர் சம்பாத்தியமுள்ளவர்களென வைத்துக் கொள்வோம். இம் மூன்று லக்ஷம் பேரும் தலைக்கு இரண்டு ரூபாய் சேர்த்து வந்தால் மாதம் ஆறு லக்ஷம் ரூபாய்கள் இருக்கின்றன. இப்பணத்தை வைத்துக் கொண்டு வியாபாரஞ் செய்தால் எவ்வளவு நன்மையுண்டாகும். வருஷத்தில் 72 லக்ஷம்சேரும். இவ்வளவு முதலுள்ள வியாபாரங்களே வெகு சில. ஒரு டிறைலாபமில்லாமலிருந்தாலும் சீக்கிரத்தில் லாபம் சித்திக்கும் என்பதில்தடையில்லை. வியாபார மாத்திர மில்லை. அதிக பணமிருப்பதால் வேறு பல சீர்திருத்தங்கள் செய்யலாம். ஏழைகளுக்குச் சொற்ப வாடகைக்கு வீடுகள் கட்டித் தரலாம். எத்தனை ஏழைமக்கள் சாக்கடை ஓரங்களிலும் வெட்டவெளிகளிலும் மைதானங்களிலும் அசுத்தமான சந்துகளிலும் வசித்து வருகின்றனர். இவர்களுக்குச் சிறு வீடுகள் கட்டிக் கொடுத்தால் எவ்வளவு தேகாரோக்கிய முண்டு! ஊர் முழுதும் சுத்தமாக வைத்திருந்தால் நோய்கள் குறையும். நோய்கள் குறைந்தால் மனிதர் தம்முடைய வேலைகளைச் சரிவரச் செய்வர். ஒரு மனிதனுக்கு வியாதி யென்றால் அவன் செய்யக்கூடிய வேலை நஷ்டமாவதுடன், அவனைப் பாதுகாக்க வேண்டியவருடைய வேலையும் நஷ்டமாகிறது. ஒரு பட்டணத்தில் வியாதியேயில்லாமலிருந்தால் இந்திரனின் அமராவதிக்கு ஒப்பாக வல்லவோ அதனைச் சொல்லலாம். மேலும் ஏழைமக்களுக்குச் சுத்த ஜலம், சுத்த உணவு இலவசப்படிப்பு முதலிய வழங்கினால் எங்கும் சந்தோஷம் குடிகொண்டிருக்கும். ஒவ்வொரு மனிதன் செலவழிப்பது மாதம் இரண்டே ரூபாய் தான். இருந்தாலும் அவனுக்கும் பட்டண முன்னேற்றத்திற்குப் பாடுபட்டோமென்ற சந்தோஷ முண்டாகிறது. பஞ்சத்தை நிவர்த்தி செய்யப் பணம் வேண்டுவோர் ஒரு நாடகத்தை நடத்தினால் அதைக் காணச் செல்லும ஜனங்களுக்கு நம்மாலியன்றதைக் கொடுத்தோம் என்ற சந்தோஷ முண்டாவதோடு, நமது காசுக்குப் பதிலாகக் காட்சியொன்றைக்கண்டோமென்ற திருப்தியுமுண்டாகிறது. அதுபோல் நமது இரண்டு ரூபாய் தேசத்திற்கு உதவுவதோடு, நமக்குவேண்டும் போதுகிடைக்குமென்றநிச்சயமுமிருக்கிறது. ஜனங்கள் ஒத்து உழைப்பதால் எவ்வளவு அனுகூலமுண்டாகிறது பார். தற்காலம் அங்கங்கே வழங்கிவரும் கோவாபரேடிவ் சங்கங்கள் ஏழைக் குடியானவருக்குச் சாஸமான வட்டிக்குப் பண உதவி செய்வதல்லவோ, விவசாயம் சற்று நலமடைந்திருக்கிறது. பலர்கூடிச் செய்யும் பணிகள் எல்லோருக்கும் இலாபத்தைக் கொடுக்கும். ஒரு பட்டணத்தின் சரித்திரம் எப்படியோ அப்படியே ஒரு தேசத்தின் சரித்திரமும், தேசத்திலுள்ள ஒவ்வொரு பட்டணமும் தத்தம் மக்களின் சௌகரியத்திற்காகப் பாடுபட்டால் தேச முழுவதும் இன்பத்தேன்பாயும். நமது தேசத்தில் எத்தனையோ சில்லரை வியாபாரங்கள் முதலில்லாமல் மங்கிக்கிடக்கின்றன. இவைகளுக்குப் போதுமான முதலைக் கொடுத்து தக்க நிபுணர்களைக் கொண்டு நடத்தினால்வியாபாரம் என்இலாபத்தைத் தராது. தேசத்திற்கு வேண்டிய பொருள்கள் தேசத்திலேயே உண்டானால் தேச மக்களின் பணம் தேசத்திலேயே தங்கி தேசத்திற்கு நன்மையை யுண்டாக்குகிறது. மக்களுள் ஒற்றுமை ஏற்படுகிறது. ஏன்? எல்லோருடைய பொது நிதியல்லவா இவ்வேலைகளுக்கு உதவுகிறது? ஒருவருக்கொருவர் சண்டையின்றி இருந்தால் தான் நிதி நிலை குலையாமலிருக்கும்.

சீடன் :—ஆனால் நிதிகளிலுள்ள பணம் கைக்கெப்படிகைக்கெட்டாமலிருக்கும்! பணத்தைத் திருப்பிக்கொடு என்றால் கொடுத்து விடுவார்களல்லவா?

குரு:—அதையே நான்சொல்லப்போகிறேன். இவ்வளவு உபயோகமாயிருக்கும் நிதியிலும் சில குறை பாடுகள் உண்டு. நிதிகள் போது பணத்தை பெடுத்து விடலாமென்பது அனுகூலமா பிரதிகூலமா வென்பது தான் கேள்வி. ஒவ்வொரு மனிதனும் என்பணம் என்பணம் என்று தன்னுடைய சந்தாக்களை யெடுத்து விட்டால் நிதி யெப்படி நிற்கும்? ஆபத்திற்கு உதவும் என்றே நிதிகளில் பணம் சேர்க்கிறோம். ஆனால் ஆபத்து எது சம்பத்து எது என்று நமக்குத் தெரிவதில்லை. நினைத்தபோது பணத்தை எடுத்து விடுகிறோம். ஒரு நேர்த்தியான வஸ்துவை வாங்க வேண்டு மென்று தோன்றுகிறது. எத்தனையோ சந்தர்ப்பங்களில் பலர் சொல்லக் கேட்டிருக்கிறோம். "பாங்கில் ஆயிரம் ரூபாய்கள் இருக்கின்றன. அவை கண்ணை யுறுத்துகின்றன. அவை செல வழிந்து விட்டால் தெரியும் திண்டாட்டம்" என்று. இன்னொன்று, பாங்குகளைப் பற்றிப் புகார் கிளப்புவதற்கு அநேக தாரதம்மர்கள் காத்திருக்கிறார்கள். தேனீ சதா தன்னுடைய வாலையாட்டிக் கொண்டு எதைக் கொட்டலா மென்று யோசிப்பது போல், சிலர் சதாகெட்ட எண்ணங்களையே வைத்துக் கொண்டிருக்கின்றனர். ஒரு பெரிய குடும்பம் அல்லது கம்பெனி அல்லது பாங்கு நிலை குலைந்து திண்டாடினால் அவர்களுக்கு அது ஒரு சந்தோஷம். அவர்களுக்கு என்ன அனுகூல மென்கிறாயோ? ஒன்று மில்லை. ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கில காளிதாஸன் 'ஒதெல்லோ' என்னும் நாடகத்தில் இயாகோ என்று ஒரு பாத்திரத்தை சிருஷ்டித் திருக்கிறார். இவன் கதாநாயகனுக்கு அவன் மனைவியின் மேல் சந்தேக முண்டாகும்படி செய்து அவளைக் கொன்று விடும்படியும் செய்தான். இதனால் அவனுக்குக் கிஞ்சிற்றேனும் பிரயோஜனமில்லை. அவனே மாண்டான். அதுபோல் சில விஷப் பூச்சிகள் மனித ரூபமாய்த் திரிகின்றன. ஒரு நிதியை நிலைநிறுத்தி செழிப்பாகச் செய்யக் கஷ்டப்பட வேண்டும், அதைக் கெடுக்கக்கஷ்டமே வேண்டியதில்லை. ஒரு பேச்சேபோதும். பாங்கு விழுந்து விடும் போலிருக்கிறதென்று வதந்தி பிறக்க வேண்டியது தான் தாமதம். நான் முன் நான் முன் என்று ஓடோடியுஞ் சென்று பணத்தை வாங்கி விடுவார்கள். பாங்கு என்பது மனிதனுடைய சரீரம்போல் சூட்சுமமானது. ரத்தஓட்டம் தேக முழுவது மிருக்கிறது. ஆனால் ஓரிடத்தில் காயம்பட்டதென்றால் ரத்த மெல்லாம் வெளியேறி விடுவதில் தேகத்திற்கு ஆயாச முண்டாகி விடுகிறது. பாங்குகளில் கட்டின பணத்தை வைத்துக் கொண்டு அழகு பார்த்துக் கொண்டிருப்பார்களா? அதை வெளியில் கொடுத்து வரும் வட்டியைக் கொண்டே பணம் கட்டுபவருக்கு வட்டி கொடுக்கிறார்கள். ஏககாலத்தில் மொத்த மிருக்கும். தொகையில் வெகு சிறிது பாகமேயிருக்கும். அப்போது எல்லோரும் கேட்டால் பணத்தைக் கொடுத்து விடுவார்கள். கொடுக்க முடியா தென்று கையையும் விரித்து விடுவார்கள். ஜனங்களுக்கும் பொறுமை கிடையாது. பணம் போய் விட்டால் எப்படி யென்ற பயமேயொழிய, பாங்கு என்றால் அதன் வியாபாரம் என்ன கொஞ்சம் பொறுத்துக் கொள்வோ மென்பதில்லை. ஆகையால் நல்ல நிதிகளும் கெட்டு விடுகின்றன. சமீபத்தில் நமது பட்டணத்திலேயே ஒரு சம்பவம் உண்டானது உனக்குத் தெரிந்திருக்கும். சென்ற பல வருஷங்களாக செட்டாக வியாபாரம் செய்யும் இந்தியன் பாங்கு விழுந்துவிடும் என்று அகாரணவதந்தி கிளம்பி, நல்ல காலமாய் பாங்குக்காரர் முன் ஜாக்கிரதையினால் ஜனங்களுக்கு நம்பிக்கை பிறப்பித்தார்கள். ஆகையால் நிதியைவிட ஜாக்கிரதையான வியாபாரத்தை எதிர் பார்க்கவேண்டும்.

சீடன் :—அஃதென்ன?

குரு :—சொல்கிறேன் கேள். நான் இருக்கிறேன். உன்னிடம் சொல்கிறேன்:—'அப்பா' உன் குடும்பத்தைப் பார்த்துக்கொள்கிறேன். என்னிடம் மாதம் மூன்று ரூபாய் கொடுத்துவிடு. நீ இருபது வருஷங்கள் அப்படிக் கொடுத்து வந்தால் அதற்குப் பிறகு உனக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன்' என்றால் உனக்குத் திருப்திகரமாக [illegible] வேறு வழியில் பணம் சேரவேண்டுமென்பதே என் கருத்து.

குரு :—சரி, இருக்கட்டும். நான் பின்னும் உன்னிடம் "அப்பா, இவ்விருபது வருஷங்களுக்குள் இறந்துவிட்டாலும் உன் குடும்பத்திற்குக் கவலை வேண்டாம். நான் அவர்களுக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேன்' என்றால் அது சம்மதமாகுமா?

சீடன் :—அதுதான் முக்கியம். நான் உங்களிடம் கொடுத்த ரூபாயை இருபது வருஷங்கள் பொறுத்து நான் வாங்குவது என்ன நிச்சயம், நானிருக்கிறபோ மென்பது நிச்சயமில்லை. அப்படி யிருக்கக் குடும்பத்திற்கு முழுப் பாதுகாப்பு கிடைப்பதென்றால் எவருக்குத்தான் சம்மத மிராது?

குரு :—நான் சொல்வது புதிதல்ல. முன் காலத்தில் அரசர்களில் சிலர் இம்மாதிரி அனுதைக் குடும்பங்களுக்குப் பாதுகாப்பு அளித்ததாகத் தெரியவருகிறது.

சீடன் :—அப்படியா! குடியாட்சி எப்போதும் பிரதிகூலம்.

குரு :—பொறு; அவசரப்படாதே. ஓரரசன் தர்மசிந்தனை யோடிருக்கிறான். அவன் மகன் பரம துஷ்டனாக விருக்கிறான். பெரிய அரசன் இறந்து விட்டால் அப்போது அவ்வனுதைக் குடும்பங்களின் கதியென்ன? தனி மனிதன் எப்போதும் சாஸ்வதமில்லை. கோனாயினும் கூற்றவனுக்குப் பணிய வேண்டியவனே. அதைவிட ஒருபெரிய சபைஅனுதை ரக்ஷகனாய் விளங்கினால்எத்தனைஅனுகூலம்! குடியாட்சிதான் எல்லாவற்றிலும் மேலான ஆட்சிமுறை. ஒருவனுக்கு அடங்குவதைவிட ஜனங்களின் சமூகத்திற்கு அடங்குவது நல்ல முறையென மேனாட்டார் அனுபவ முறையில் அறிந்திருக்கின்றனர். ஆகையால் தர்ம சிந்தனையுள்ள அரசனுக்குப் பிரதியாக ஒரு சாஸ்வத நிதி "மஹா ஜனங்களே அஞ்சேல்! நீங்கள் எல்லோரும் நமது நிதியைச் சேருங்கள். மாதம் இவ்வளவென்த் தொகை செலுத்துங்கள். உங்களுக்கு ஏதேனும் விபத்து நேர்ந்தால் இந்நிதி உங்கள் குடும்பங்களைப் பாதுகாக்கும். அவர்களைப் பற்றிக் கவலைவேண்டாம். குறித்த காலம் இவ்வளவென்று திட்டஞ் செய்து கொள்ளுங்கள். அதற்குப் பிறகு நீங்களே உயிரோடிருப்பின் உங்கள் பணத்தைக் கொடுத்து விடுகிறோம். அதன் மத்தியில் எப்போதாயினும் உங்களுக்கு மரணம் சம்பவித்து விட்டால் நாங்கள் நீர் உயிரோடிருந்தால் பெறும் தொகையை முழுவதும் கொடுத்து விடுகிறோம்" என்றால் எவ்வளவு நலமாக விருக்கும்?

சீடன்:—சுவாமி! அம்மாதிரி நிதிகளும் உளவா? அப்படி மத்தியில் இறந்துவிட்டாலும் முழுத்தொகையுங் கிடைக்குமென்றால் அது நிதிக்கு ஊனமில்லையா?

குரு:—எல்லோரும் இறந்து விட்டால் ஊனந்தான். நிதியே நிற்காது. ஆனால் வாஸ்தவத்தில் அவ்வாறில்லை. ஏககாலத்தில் எல்லோரும் இறந்து போகவே மாட்டார்கள்.

சீடன்:—தாங்கள் சொல்வது வியப்பை விளைவிக்கிறது. அவ்வளவு கண்டிப்பாய் எப்படிச் சொல்ல முடியும்?

குரு:—ஈஸ்வரன் எல்லாம் வல்லவரல்லவா? அவர் சர்வஞ்ஞர். உலகத்தை அடியோடு ஒழித்துவிடவா சிருஷ்டித்தார்? பிரபஞ்சம் உற்பத்தியாகி எத்தனையோ லக்ஷம் வருஷங்களாயின. இதன் மத்தியில் எத்தனையோ வெள்ளங்களும், பூகம்பங்களும், பிணிகளும் வந்திருக்கின்றன. ஆனால் மானிடப் பூண்டு ஒழிந்ததா? ஒரு தனி ஜீவனைப்பற்றி யொன்றும் சொல்லமுடியாது. இத்தனை வருஷம் உயிரோடிருப்பான் என்று சொல்வது கஷ்டம். ஆனால் மனித கோஷ்டி இன்னும் பல்லாயிரமாண்டுகள் ஜீவித்திருக்கும் என்பது திண்ணம். கடவுளுக்குத் தனிஜீவனைக் குறித்துக் கவலையில்லை. மனித கோஷ்டியே முக்கியம். அதனால்தான் இறந்தவருக்குப் பதிலாக மனிதர் பிறக்கிறார்கள். ஆகையால் நிதியைச் சேர்ந்தவரெல்லாமிறப்பதில்லை; இறக்கவு மாட்டார்கள். ஒரு வியாபாரத்தினால் ஒருபெரியஜனத்தொகை கஷ்டமாகலாம். ஆனாலும் எல்லோரும் இறக்கவே மாட்டார்கள். ஆகவே நிதியில் [illegible]

(தொடரும்)

## திருநாம நல்லூர் கல்வெட்டுகள்

(கருவூலத்தான்)

[கல்வெட்டினால் நமது நாட்டின் அரசியல், சமயம் முதலியன தெரிகின்றன. மற்றும் எழுத்துக்களின் வரி வடிவம் பழக்கவழக்கம் சொற்போக்கு முதலியவைகளும் விளங்குகின்றன. இவற்றைத் தமிழர் ஒழுங்காய் நந்தண்டமிழ் மொழியில் வரி வடிவத்தோடு விளக்கி வெளியிடாதது தமிழ் மொழிக்கு ஒரு பெருங் குறை. ஆதலால் அவற்றின் போக்கைத் தெரிந்து கொள்ள சைவ வைணவக் கோயில்களிலுள்ள படியின் எழுத்தொலியைத் தழுவி, நில, நகை, கோயில், பாட்டு, தானம், அரசியல் முதலியன செறிந்து வரும் சிலவற்றைத் தருகிறோம். வரி வடிவங்களோடு தமிழ் விளக்கம் பெற்று வரவேண்டுமென்ற எண்ணத்தோடு கீழே இருபது படிகள் தருகிறேன். இவை கல்வெட்டுக் குறிப்பின் (Epigraphica Indica) உதவி கொண்டு அதில் ரோமர் ஒலியில் (Roman script) காட்டியதை ஒட்டி எழுதியதாகும். இதனை வாசகர்கள் படித்துப் பண்டைக் கோயில்கள் நமக்குப் பயக்கும் நன்மையை மதிக்க வேண்டுகிறேன்.]

(க) ஸ்வஸ்தி ஸ்ரீ 1மதிரை கொண்ட கோபரகேசரி பன்மர்க்கு யாண்டு 28-வது திருமுனைப்பாடி திருநாவலூர் திருத்தொண்டீஸ்வரன் திருக்கற்றளி செய்வித்த 2ராஜாதித்த தேவர் தாயார் நம்பிராட்டியார் கோக்கிழானடிகள் பரிவாரத்தாள் சித்திர கோமளம் வைத்த நொந்தா விளக்கொன்றுக்கு வைத்த 3சாவாமூவா பேராடு தொண்ணூறு. ஈழ விளக்கு ஒன்று. இது பன்மாகேஸ்வரர் இரக்ஷை. மேற்படியாள் சித்திர கோமளம் வைத்த விளக்கொன்று ஈழ விளக்கு.

(உ) ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரையும் ஈழமும் கொண்ட கோபரகேசரி பன்மர்க்கு யாண்டு 39-வது. திருமுனைப்பாடி திருநாவலூர் திருத்தொண்டீஸ்வரத்து மகாதேவர்க்குப் பிள்ளையார் ராஜாதித்த தேவர் தேவியார் இலாட ராயர் மகளார் மகாதேவடிகள் தமையனார் அரையர் ராஜாதித்தன புகழ்விப்பவர் கண்டனை 4சாத்தி வைச்ச நொந்தா விளக்கொன்றினுக்கும் வைச்ச சாவா மூவா பேராடு நூறு. நிலவிளக்கு நிறை 70 பதின் பலம். 5சந்திராத்தவல் எரிப்பதற்கு இது பன் 6மாகேஸ்வரர் இரக்ஷை.

(ங) ஸ்வஸ்தி ஸ்ரீ உதகன்னர தேவர்க்கு யாண்டு 17-வது முனைப்பாடி திருநாவலூர் திருத் தொண்டீஸ்வரத்து மகாதேவர்க்கு 7ஸ்வஸ்தி சுக்கிரான் மயோதயாசலாதித்ய சக்கிராத சிம்ஹத்துவஜ சிகி மகா இலஞ்சன மலைய குலோத்பவ மலைய குல சூளாமணி ஸ்ரீமத் நரசிம்ஹவர்மமிலாடுடைய நாட்டான சித்த வடவனுகிய நரசிம்ஹ வன்மன் வைத்த நொந்தா விளக்கொன்றினுக்கு வைத்த பொன் பதின் 8கழஞ்சு இப்பொன் பதின் கழஞ்சு கொண்டு வெண்ணை நல்லூர் நாட்டு செவலை சபையோமும் ஊரோமும் ஆட்டு நாற்று நாழி நெய்கொடு வந்து 9மாதேவியாலே சந்திராதித்தவல் அட்டுவோம் ஆனோம் செவலைசபை ஊரோம். ஈழவிளக்கு ஒன்று. இது பன் மாகேஸ்வரர் இரக்ஷை.

(ச) ஸ்வஸ்தி ஸ்ரீ உசகரையாண்டு 875-வது திருநாவலூர் திருத்தொண்டீஸ்வரகாத்து தேவர்க்கு முனையதியரையன் குலமாணிக்கன் இராமதேவன் வைத்த நொந்தாவிளக்கு ஒன்று, சாவாமூவா பேராடு 100 இவ்வாடு நூறுங்கொண்டு சந்திராதித்தவால் எரிக்க நெய் அட்டுவார் ஆனார். 10தேவதானம் ஏகதிரசதுர்வேதி மங்கலத்து சபையார்.

(ரு) ஸ்வஸ்தி ஸ்ரீ சகரை யாண்டு 876 வது திருநாவலூர் திருத்தொண்டீஸ்வரத்து மஹாதேவர்க்கு முனையதியரையர் குலமாணிசருமானார் தேவியார் அக்கி நங்கையார் வைத்த நொந்தா விளக்குக்கு வைத்த சாவா மூவா பேராடு நூறு. நூறுங்கொண்டு 11நிசதம் உழக்கு மாதேவியால் நெய் அட்டுவோம் ஆனோம் அரும்பாக்கத்தூரோம் இது பன் மாகேஸ்வரர் இரக்ஷை.

(சு) ஸ்வஸ்தி ஸ்ரீ கோபகேசரி பர்மரான ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு** வது ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துத் திருமுனைப்பாடி வேலூர் நாட்டு திருநாவலூரான ராஜாதித்த தேவபுரத்துத் திருத்தொண்டீஸ்வரத்து ஆடவல்லார்க்கு உடையார்படை 12வீரநாராயணத்தெறிந்த வில்லிகள் செய்திட்டமாலை-னல் பொன் முக்கழஞ்சு அரை; இதில் தடவி கட்டின ஸ்படிகம் நாயகன் உள்பட உரு பதினெட்டு நீலம் இரண்டும் முத்து தோடு மாலை ஒன்று இது செய்வித்திடுவித்தான் படைக்கு நாயகம் செய்தமாராயான் பழூர் நக்கன், இவனே திருக்கைக்கு சாத்த அருளதடவி கட்டினஸ்படிகம் ஒன்று முத்தேறின காரை ஒன்று பொன்கழஞ்சு இவை பன் மாகேஸ்வரா இரக்ஷை.

1 முதல் பராந்தகன்.

2 முதல் பராந்தகன் முதல் மகன்.

3 வைத்த ஆட்டின் தொகை குறையாது இறந்தவற்றிற்குக் குட்டியைச் சேர்த்தல்.

4 சூடி—சாற்றி.

5 சந்திர சூரியர் வுள்ளளவும் எரிய.

6 சிவனடியார் பாதுகாப்பில் வைக்கப்பட்டது.

7 நரசிங்க முனையரையர் பரம்பரை குறிப்புகள்.

8 ஓர் இடை.

9 மாதேவி யென்ற அரசியின் பெயரால் வழங்கும் முகத்தல் அளவு.

10 அந்தணர்தானம்.

11 தினம். கோயிலில் நிசந்தா யென வழங்கும் பெயரையும் நோக்க.

12 பராந்தகன் தெரிந்தெடுத்த.

## கந்தர் அநுபூதி

—

மறை பொருள் விளக்க உரை

—

சென்னை, இராயப்பேட்டை 'வேத ப்ரவசன மந்திரத்து' ஸ்ரீமத் சிவத்தியானனந்த மஹரிஷி எழுதியது:—

### ஜனனம் எடாதிருக்க

மாவேழ் ஜனனங் கெடமாயை விடா
மூவே டணையென்று முடிந்திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணரும்
தேவே சிவசங்கர தேசிகனே. 39.

### அந்வயம்

கோவே! குறமின் கொடி தோள் புணரும் தேவே! சிவ சங்கர தேசிகனே! மா எழ் ஜனனம் கெட, மாயை.(யை) விடா (த) மூ ஈஷணை என்று முடிந்திடுமோ? (ஈஷணை ஏடணை யென்றாயது எதுகை நோக்கி)

### பொழிப்புரை

தலைப்பு:— [ஒருவன் சாகும்போது எதை நினைக்கிறானோ அந்த அந்திம ஸ்மாணத்துக்கு ஏற்றவாறு பிறக்கிறான் என்னும் சுருதி வாக்கின்படி மக்கள் விடுதலையாகிய கடை நினைப்பைச் சாகுந் தருவாயில் எண்ணிப் பிறவி நீங்கி ஒழிவதற்குப் போதிக்கும் மறை இது.] நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்புகளிலடங்கிய எண்பத்து நான்கு லட்சம் ஜீவ பேதத்தில் ஒன்றிலேனும் பிறவாதிருக்க.

செய்யுள்:— (அண்ட பிண்ட சராசரங்கள் அனைத்துக்கும்) நாயகனே! குறவர் குலத்து வளர்ந்த மின்னற்கொடி போன்ற வள்ளி நாச்சியாரது தோளை (சத்தியை) தனதாக் கொள்ளும் திவ்ய சக்ஷுஸ் வாய்ந்தவனே! மங்கலமான நற்காரியங்களையே செய்யும் குருமூர்த்தமே! பெருத்த எழ்வகைத் தோற்றத்திலும் யான் பிறவாதபடி, மயக்கத்தை விட்டொழியாத (தாரேஷணை, புத்ரேஷணை, அர்த்தேஷணை யென்னும்) மூன்று ஆசைகளும் எப்பொழுது எனக்குச் சற்றுமில்லாமற் போகும்? (நீ கூறுவாயாக.)

### விசேஷக் குறிப்புகள்

அண்டஜம் (முட்டையிற் பிறப்பன) ஜராயுஜம் (பையிற் பிறப்பன) சுவேதஜம் (அழுக்கிற்றோன்றுவன) உத்பீஜம் (மண்ணைப் பிளந்து வெளிவருவன) ஆகத் தோற்றம் நான்கு வகையாம். இத்தோற்றங்கள் தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்னும் எழ்வகைப் பிறப்புக்குள் அடங்குமென்பராயினும், தேவரென்ற பகுதி அதன் பின்னர்க் கூறப்பெற்ற ஆறு பகுதியிலும் திவ்வியத் தன்மை பெற்றதனால், மாந்தரால் பகுத்துணரப்படும் பேதமே யன்றி அத்தேவப் பிறவி தனிப்பட்ட பிறவி வாய்ந்த தல்லவென வுணர்க. இத்தேவப் பிறவி யென்பது ஒருவகைப் பரிணாமமே யன்றி மேற்சொன்ன நால்வகை யோனிகளிலிருந்தும் பிண்டீகரித்து வந்ததாகச் சொல்ல வியலாது. ஏனெனில் அப்படி வந்ததென ஒப்புக்கொண்டால், பிறவியெடுத்த ஒவ்வொரு உயிரும் தேவனெனும் அதிவியாப்தி தோஷம் வரும். அல்லது தேவப் பிறவியிலும் மற்றப் பிறவிக்கு ஏதுவான கர்மேந்திரிய உத்ஸர்க்க விஸர்க்கங்களைத் தூலவளவிற் கூறவேண்டி வரும். ஸ்தூல சரீரமில்லாத இத்தேவப் பிறவிக்கு அளவு கூறுதல் தகாதானதுபற்றி தேவர் என எழாவது பிறவியாகக் கூட்டி யெண்ணியது உபசாரமென்க. பின் சுருதிகளிலும் புராணங்களிலும், பிருச்னி மருத்துக்களைப் பெற்றாளென்றும், அதிதி, திதி என்னும் தேவாசுர மாதர்கள் பிள்ளைகளைப் பெற்றார்களென்றும் கூறப்பெற்றுள்ளதே யெனின் பிரத்தியக்ஷப் பிரமாணமே யன்றி மற்றும் பிரமாணங்களில்லை யென்று வாதிப்பாருக்கு மற்றப் பிரமாணங்களு முண்டு என்பதை விளக்கவும், ஈசுவரனது ஸர்வசக்தித் தவத்தைக் காட்டவும் ஞானிகளால் உதாரணத்துக்காகச் சிருஷ்டிக்கப்பட்ட உபசார மொழிகளேயன்றி அவை உண்மையாக மாட்டா. அதே சுருதியிலேயே, ரிபுக்கள் மக்களாய்ப் பிறந்து சில அரிய கர்மங்களைச் செய்து தேவரானார் என்பது முதலிய வாக்கியங்களைப் பார்க்கக் காண்கிறோம். பின் உண்மை என்னவெனின், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்னும் ஆறிலும் தெய்வத் தன்மையைப் பெற்றுத் தேவ நிலைக்குப் பரிணமித்துச் செல்லக்கூடியசக்தியுண்டென்பதை உலகோர்க்கறிவிப்பதற்கும், அப்படித் தெய்வ நிலையை யுற்றோர்களுக்கு மற்றப் பிறப்புக்களோடொத்த ஒரு தனிப் பிறப்பு அமைத்தாலன்றி அத்தெய்வ நிலையை யடைந்தாரை அமைத்துக்கொள்வதற்கு ஓர் இடம்பாடில்லாமற் போகுமென்பதை வற்புறுத்துவதற்கும், தேவர் என்னும் வகுப்பை எழுவகைப் பிறவியில் முதற் பிறவி போல் அமைத்ததென்க. இதுவே தசாவதாரம் போன்ற அவதார விசேஷங்களுக்கு ஆதாரமுமென்க. இதனைச் சிலர் சப்தப் பிரமாணத்துக்கு மாறுபட்டான கொள்கை யென்று நினைத்தல் கூடும். அன்னார் வேத ஸூக்ஷ்மங்களை அறியாதவராவர். மற்ற இவ்வெழுவகைத் தோற்றத்துள்ளும் எண்பத்து நான்கு லட்சம் ஜீவ பேதமென்று அமைத்துள்ளதும் எண்ணிறந்த பிறவி பேதமெனக் கூறவந்ததே யன்றி வேறில்லை. இதனையே, தாயுமானாரும், 'எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிது அரிதுகாண்' என்று சொல்லிப் போந்தார். இத்தனை பிறவிகளுள் ஒன்றை எடுப்பதற்குக் காரணம், மனமும் அம்மனம் பெற்றதால் தன்னை இறைவனினின்றும் வேறாகப் பிரித்துநோக்கினதுமே என்று இந்நூல் ஏழாவது மறையின் விசேஷக் குறிப்பில் விஸ்தாரமாகக் கூறப்பெற்றது. அப்பிறவிகள் வளர்ந்து பெருகித் தொடர்ந்தேறி வந்ததற்கு மூலகாரணம் பரமாத்மஸ்வரூபமாயிருந்த ஆன்மா அப்பரமாத்மாவையேபற்றி ஸாக்ஷிமாத்திரையாக நில்லாமல், உடலையும் உயிரையும்பற்றி அபிமானித்து ஆசைகளை விருத்தி செய்ததேயாகும். ஆனதுபற்றியே, 'மூவேடணை என்று முடிந்திடுமோ' என்றார்.

ஈண்டு பரிணாம வாதிகளில் ஒரு சாரார் ஒரு தோற்றத்திலிருந்து மற்றொரு தோற்றத்துக்கு மேலேறினவன் மீண்டும் கீழ் வகைப்பட்ட தோற்றத்திற் பிறப்பதில்லையென வாதிப்பர். உதாரணமாக எல்லாவிதப் பிறப்புக்களையும் பிறந்து பின்னர் மனிதனாக உற்பவித்தவர் மறுபடியும் கீழ்ப்பட்ட உயிர்களாகிய விலங்கு புள் முதலியவற்றிற் பிறப்பதில்லையெனக் கூறுவர். அன்னார் அப்படிக் கூறுவதற்கு ஒரு காரணம் இது. ஒருவனது தகப்பனார் ஜடபாதர்போல மானாகவோ அல்லது வேறு இச்சையை அந்திம ஸ்மாணமாகக் கொண்டதனால் புல்லாகவோ அல்லது காய்கறிகளாகவோ பிறப்பதாக எண்ணிக்கொண்டால், அம்மானையோ அல்லது புல், காய்கறிகளையோ மனித வாழ்க்கையிலுள்ள அவனது புத்திரனே உணவாகக் கொண்டதாக எண்ணிப் பார்த்தால் அது எவ்வளவு கோரணியாகவிருக்குமென்பர். இன்னார் பிறவித் தத்துவத்தை யறியாதார் என்போம். என்? பக்குவப்பட்டு மேல் நிலைக்கு வந்த மனிதன் மறுபடியும் ஆசாவசத்தினால் கீழ்ப்பிறவியை எடுத்தானாயினும் அப்பிறவியிலும் முன் ஜன்மத்து நல்லுணர்ச்சிகள் அவனைப் பின்பற்றிக் காக்கும் செய்கையையிவர்கள் மறந்தனர். மேலும் அத்தகைய ஆபாஸவுணர்ச்சிகளை அறிவினால் ஆராய்ந்து பார்ப்பார் ஒவ்வொருவரும் அவற்றிற்கு வேண்டிய சமாதானங்களைக் கண்டறிதல் கூடும். அதுவன்றிக் கட்சிப் பிரதி கட்சி வாதமாகக் கூறும் எவருக்கும் அவரது பிடிவாத குண மேம்பாட்டினால் உண்மையுணர்ச்சி புலப்படாதென்க. அன்னார்க்கு அருள் நூல்களைக் கூறுதல் விருதா காலட்சேபமாகும். மேலும் இப்பிறப்புக்களில் ஒவ்வொன்றும் ஒத்த பண்பும், ஒத்த பயனுமுள்ளவை யென்பதும், ஒன்றுக்கொன்று கீழ் மேலென மதிப்பதெல்லாம் அறியாமையால் வந்த செருக்கின் பாற்படு மென்பதும், கல்லறிஞர்களின் துணிபு. தோள்புணர்தல் என்பதற்குச் சக்தியைத் தன்னதாகக் கொள்ளல் என்றதும், சிவசங்கர தேசிகனே என்பதற்கு மங்கலமான நற்காரியங்களைச் செய்யும் குருமூர்த்தமே யென்றதும் தத்துவவுரைகளாம். ஸ்தூலமாக, வள்ளியைப் புணர்பவனேயென்றும் சிவசங்கரனுக்குக் குருவே யென்றும் கூறுவதில்பொருள்நயம் ஒன்றும் அதிசயமாக வில்லாமைபற்றி, இச்சூக்கும உரையை உய்த்துணர வைத்ததென்க. ஆசைகளுக்கெல்லாம் மூலகாரணம், மெய்யுணர்ச்சி யில்லாமையே யாதலின் 'மாயைவிடா மூவேடணை' என்றார். இதனையே தாயுமானார்,

"மெய்விடா நரவுள்ள மெய்யருள்இருந்து, நீ, மெய்யான மெய்யை யெல்லாம், மெய்யென உணர்த்தியது மெய்; இதற்கு ஐயமில்லை; மெய் ஏதும் அறியா வெறும், பொய் விடாப் பொய்யினேன் உள்ளத்திருந்தான், பொய்யான பொய்யை எல்லாம், பொய்யெனு வண்ணமே புகலவைத் தாயெனிற் புன்மையேன் என் செய்குவேன்?" என்று கூறிப் போந்தார். அதனால் ஸத்திய வுணர்ச்சி வரவே ஈஷணைகளின் விலக்கும் ஈஷணைகள் விலகவே ஜனனம் அறுதலும் பெறப்பட்டதை உணர்க.

# "நவசக்தி" ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் எழுதிய நூல்கள்

## மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும்

இந்நூல் காந்தியடிகள் வரலாற்றைக் கூறுவதன்று. இஃது அவர் வரலாற்றிலுள்ள நுட்பங்கள் மனிதவாழ்க்கையோடியைந்து நிற்கும் முறையைக் குறிப்பது; அதாவது காந்தீயத்தை அறிவுறுத்துவது; பகவத்கீதை திருக்குறள் என்னும் இரண்டு நூல்களின் சாரமாக அமைந்துள்ளது.

இந்நூற்கண் விளங்கும் முதற்பொருள் மூன்று, (க) மனிதன் எவன்' என்பது (உ) ஒருவன் மனிதனாக எத்தகை வாழ்க்கை நடாத்தல் வேண்டுமென்பது (ங.) மனித வாழ்க்கைக்கு இலக்கியர் மகாத்மாகாந்தி என்பது.

இந்நூற்கண் பெண்மக்கட்குரிய பொருள், ஆண்மக்கட்குரிய பொருள், அரசியலுக்குரிய பொருள், சத்தியாக்கிரகப் பொருள், சமயப் பொருள் முதலிய பல பொருள்கள் காணலாம். இல்லறம், தியாகம், அஹிம்சை, சுயராஜ்யம், சத்தியாக்கிரகம், சமயவாழ்வு முதலியன வாசிப்போர்க் கின்பூட்டுவன. சமயவாழ்வில் சமரச சன்மார்க்க நுட்பம் மிக விளக்கமாக ஓதப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு தலைப்பின் கீழும் அடிகளின் அறவுரைகளைத் திரட்டி அவைகளை முறைப்படுத்தியுள்ள ஒழுங்கும் பொருளும் வாசிப்போர்க்கு இன்பூட்டுவதோடு நேரிய வாழ்வு நடாத்துமாறு அவரை அலைகள் தூண்டும். சன்மார்க்கத் துறைகள் பல இந்நூற்கண் பொலிதல் காணலாம். மூன்றாம் பதிப்பு. விலை ரூபா 2-8-0.

## பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை

இந்நூல், பெண்மை, தாய்மை, இறைமை என்னும் முப்பொருளை முதலாக உடையது. இம்மூன்றும் முறையே நூலின் உடல் உள்ளம் உயிராக அமைந்திருக்கின்றன. இம்மூன்று முதலினின்றும் கிளம்பிய கவடுகளும் கோடுகளும் நூலின் பிற உறுப்புக்களென்க.

வேத காலத்துப் பெண்மக்கள் நிலை, பழந்தமிழ் நாட்டுப் பெண்மக்கள் நிலை, அவர்கள் உரிமை, இடைக்காலத்தில் பெண்மக்கட்கு நேர்ந்த சிறுமை, அச்சிறுமை போக்குதற்குரிய வழிகள் முதலியன இந்நூலில் ஆராய்ச்சி முறையில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. பூதபௌதிக நூல்களை யொட்டிப் பெண்ணின் பெருமை நிறுவிக் காட்டப்பட்டிருக்கிறது.

இயற்கை வாழ்வு, செயற்கைத் தாழ்வு, உடலோம்பல் முதலிய நறும்பொருள்கள் நூலின் ஊடே ஊடே பெய்யப்பட்டிருக்கின்றன. கூடாவொழுக்கம், இளமைமணம், பதியிலாமை முதலியவற்றான் விளையுங் கேடுகள் நூற்கண் உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. விலை ரூபா 2.

## தமிழ்த் தென்றல்

தமிழ் மொழியில் வீரச்சுவையுண்டு என்பதை இந்நூலிற் காணலாம். இயற்கை வருணனைகள் இயற்கைப்படம்போலக் காட்சியளிக்கும். மேடைகளில் நயம்படத் தமிழில் பேச முயல்வோர்க்கும், தமிழ்க் கட்டுரைகள் வரைவோர்க்கும் இந்நூல் பெருந்துணை செய்யும். ஒவ்வொரு தமிழ் மாணுக்கர் கையிலும் இந்நூலிருத்தல் வேண்டும். இந்நூலைப் படிப்போர்க்குத் தேசபக்தியும், உரிமையில் வேட்கையும் வீறிட்டெழும் என்பது உறுதி.

தமிழ்நாட்டுப் பண்டைப் பெருமை, தாய்மொழிப்பற்று, பிறப்புரிமை, உரிமை வேட்கை, தேசபக்தி, சுயராஜ்யப் பேறு, ஒற்றுமை, சகோதர நேயம், ஊக்கம், காந்தியடிகள் அறம், ஒத்துழையா இயக்கச் சிறப்பு, அவ்வியக்க முறைகளால் நாட்டுக்குள்ள நலன் முதலிய பொருள்கள் இந்நூற்கண் ஆங்காங்கே மிளிர்கின்றன. பெயருக்கேற்ற பொருளை இந்நூலிற் பெறலம். விலை ரூபா 2.

## சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து

இந்நூற்கண் இளமை மாண்பு, அழகின் பெற்றி, இளமையழகோம்பு முறைகள், காவியச் சிறப்பு, ஓவியத்திறன், இசை நுட்பம், நாடக நலன், சமரச சன்மார்க்கமென்னும் அன்பு நெறியே சமயமென்பது, கோயில் சீர்திருத்தம் முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. நாடு மொழி பிறப்பு முதலியவற்றான் வேற்றுமை பாராட்டுவதால், சகோதர நேயத்துக்கு ஊறு நிகழ்தல் தென்னத் தெளிய விளக்கப்பட்டிருக்கிறது; சாதி வேற்றுமை, தீண்டாமை, பெண்ணடிமை முதலிய சிறுமைகளின் நீக்கம் நாட்டுக்கு விடுதலை நல்குவது என்று வலியுறுத்தப்பட்டிருக்கிறது; கண்மூடி வழக்க வொழுக்கங்கள் மிக உரமாக மறுக்கப்பட்டிருக்கின்றன; வாழ்விற்குரிய வேறு பல சீர்திருத்தங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலின் உள்ளுறை இளைஞருலகிற்கு நல்விருந்தளிக்குமென்பதில் ஐயமில்லை. விலை அணா 8.

## முருகன் அல்லது அழகு

இஃது இயற்கை அழகை எடுத்துக்கூறும் நூல். இயற்கை அன்னையின் மாண்பை, இந்நூற்கண் காணலாம். இந்நூற்கண் முருகன் சொற்பொருள் விளக்கம், அழகினியல், இளமைப்பேறு, இயற்கை மாண்பு, நோன்பு, வழிபாடுகளின் திறம், முருகனடியார் இயல்பு முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலை முற்றும் பயில்வோர் உள்ளத்தில், இயற்கை வழிபாட்டில் ஆர்வம், ஒரே கடவுள் ஒரே நெறி என்னும் உறுதி, எவ்வுயிர்க்குந் தீங்கு நினையாப்பேரறம் முதலியன நிலவும். இயற்கை வருணனையும் உரை நடையும் நெஞ்சைக் கவரும். விலை ரூபா 1.

## என் கடன் பணிசெய்து கிடப்பதே

இந்நூலில் பணியின் பெருமை விரிவாக ஓதப்பட்டிருக்கிறது. கடவுள்பணி, சராசரப் பணி, சிறப்பாகத் தேசப்பணி ஆகிய இப்பணிகளை இந்நூலில் காணலாம். இஃதொரு கருமயோக நூல்; காலத்துக்கேற்றது. இரண்டாம் பதிப்பு. விலை அணா 8.

## சைவத்தின் சமரசம்

இந்நூற்கண் சமயத்தின் இயல்பு இஃது என்பதும், எல்லாச்சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயரால் பல வழியில் போற்றுகின்றன என்பதும், சமயங்கள் பலவாய்க் கிடப்பினும் அவைகள் யாவும் சமரசத்தையே குறிக்கொண்டு நிற்கின்றன என்பதும், அச்சமரசமே சைவமென்பதும், பிறப்பையொட்டி உயர்வு தாழ்வு பாராட்டாமை, கைம்மாறற்ற பணி, பிறர் குற்றம்பொறுத்தல், பாவ மன்னிப்பு முதலியன சைவசமயத்தில் சிறப்பாகவிருக்கின்றன என்பதும், அருள்-கருணை-இரக்கம்-தயை உள்ள விடங்களிலெல்லாம் சைவம்மிளிரும் என்பதும், சைவம் ஒரு சமயம் அன்றென்பதும் பிறவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. விலை அணா 8.

## சைவத்திறவு

"தென்னாடுடைய சிவனே போற்றி—எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்னும் உரையைப் பீடிகையாகக் கொண்டு எழுதப்பட்டது.

இந்நூலிடை, மாணிக்கவாசகனார் நிலை, திருவண்டப்பகுதி நுட்பம், நினைப்பற நினைத்தலின் விளக்கம், மூவித உடலங்களின் பாகுபாடு, ஒரே கடவுளுண்மை, 'தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறை" என்பது, இறைக்கும் இயற்கைக்குமுள்ள தொடர்பு, சேய்சிவம் என்பது, சமரசம், இறைவனை புணரும் வழி, இறைவனது சொரூப தடத்த இயல்புகள், காவியங்களின் இன்றியமையாமை, நம்பிக்கையின் அவசியம், ஆராய்ச்சியின் அளவு, சைவத்திறவுள்ள இடம், கடவுளின் அகண்டாகாரப் படம், "தோடுடைய செவியன்" என்பதின் உள்ளுறை, ஆண்டவன் பெண் ஆண் வடிவமாகவிருக்கும் நுட்பம், தோடு விடை மதி சுடலை முதலியவற்றின் உட்பொருள், கோயில்களின் நோக்கம், தற்காலக் கோயில்கள், சாதிப்பேய், நூல்களுங் கோயில்களே என்பது, தவப்பேறு முதலிய பொருள்கள் சுருங்கிய முறையில் ஆங்காங்கே விளக்கப்பட்டிருக்கின்றன. உருவ வழிபாட்டின் நுட்பமும், இன்றியமையாமையும் விளக்கமாக இந்நூற்கண் ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலைப் படிப்போர்க்கு உருவ வழிபாட்டைப் பற்றிய பலதிற ஐயப்பாடுகள் நீங்கும். விலை அணா 8.

## இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்

இஃதொரு சமரச சன்மார்க்க நூல். இந்நூலில் ஷடாந்த இயல், சமரச நுட்பம், சன்மார்க்க விளக்கம் முதலியன மிக விரிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

இராமலிங்க சுவாமிகள் ஷடாந்த சமரச சன்மார்க்கத்தில் நின்று, அருநெறியோம்பி, உயிர்கள் வழிபாடே கடவுள் வழிபாடு என்பதை யுணர்ந்து, சமயவாழ்வு நடாத்திய விதம், அவர் ஆண்டவனை நோக்கிச் செய்த முறையீடு, அமுத அமுகை, அவர் கொண்ட குரு, பொருணூல், வழிபடுகடவுள், அவரடைந்த மரணமிலாப் பெருவாழ்வு, அதற்குரிய முறை முதலியன தெளிவாக இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் காலத்துக்கேற்ற ஒன்று என்பது நூலை முற்றும் வாசிப்போர்க்கு இனிது விளங்கும். இக்காலதேச வர்த்தமானம் வேண்டுஞ் செம்மைச் சீர்திருத்தங்கள் பல இந்நூற்கண் மிளிர்கின்றன. விலை ரூபா 1.

## கடவுள் காட்சியும் தாயுமானாரும்

மன மாசுகளை நல்லறிவால் கழுவி உண்மையில் மூழ்கி நின்ற அநுபூதிமான்களில் ஒருவராகிய தாயுமானார் அருளிச் செய்த "ஐவகை எனும் பூதம்" என்னும் திருப்பாட்டைப் பீடிகையாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுளது. நூலின் திரண்ட கருத்து: மெய்ம்மையில் கடவுள் காட்சி பெறலாமென்பது. கடவுளின் அருட்டன்மையும், படைப்பு முறைகளும், படிகளும், படைப்பின் நோக்கமும், உயிர்களின் கடமையும் சுருங்கச் சொல்லி விளக்கவைக்கப்பட்டிருக்கின்றன. விலை அணா 4.

## தமிழ் நூல்களில் பௌத்தம்

வேண்டுவோர் 5 அணா தபால் முத்திரை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். விலை அணா 4.

நாயன்மார் விலை அணா 3. சைவசமய சாரம் விலை அணா 1.

தமிழ்நாடும் நம்மாழ்வாரும் விலை அணா 4.

இமயமலை அல்லது தியானம் விலை அணா 6.

**இந்நூல்கள் எல்லாவற்றையும் ஏககாலத்தில் வாங்குவோருக்குத் தபாற் செலவின்றி, மணியார்டர் கமிஷன் கழித்து வி. பி-யில் அனுப்பப்படும்.**

# வேறு பதிப்புகள்

## விநாயகர் பனுவல் திரட்டு

விநாயகக் கடவுள் சம்பந்தமாக ஆன்றோர் அருளிச் செய்துள்ள அரிய பாக்கள், பல நூல்களினின்றும் திரட்டப்பட்டன. பூஜா காலங்களில் ஓதுதற்குரிய சிறந்த நூல். விலை அணா 6

## முருகவேள் பனுவல் திரட்டு

### சுப்பிரமணிய பக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

இதில், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்தர்சஷ்டி கவசம், திருமுருகாற்றுப்படை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், திருப்போரூர் சந்நிதிமுறை, திருத்தணிகை சந்நிதிமுறை, கந்தபுராணம், தணிகைப் புராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கியிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. இப்பதிப்பில் முன்னினும் பாக்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விலை ரூ. 1.

## முருகன் திருவருட்பா

ஸ்ரீமத் - இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்தது; திருவருட்பா ஐந்தாந் திருமுறையிலிருப்பது; ஓதுவோர் மனதை அழலிடைப்பட்ட மெழுகென உருகச் செய்வது. விலை அணா 8.

## தேவி தோத்திர மஞ்சரி

தாயுமான சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், குமரகுருபர சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள், சிவஞான சுவாமிகள், அபிராமிபட்டர் முதலிய ஆன்றோர்கள் அருளிச் செய்த பாடல்களும், சௌந்தரியலகரி, ஆனந்தலகரி, சக்திகவசம் முதலிய பல நூல்களினின்றும் திரட்டி எடுக்கப்பட்ட தேவி தோத்திரங்களும் அடங்கிய அரிய நூல். விலை அணா 4. 5 அணா தபால் முத்திரை அனுப்புவோர்கட்கு ஒரு புத்தகம் அனுப்பப்படும்.

## திருப்போரூர்ச் சந்நிதிமுறைத்திரட்டும், அரும்பதவுரையும்

இதில் அரிய பாக்கள் திரட்டி எடுக்கப்பட்டுள்ளன. அரும் பதங்களுக்கு உரை வரையப்பட்டிருக்கிறது. வேண்டுவோர் விலைக்கு மேல் ஒரு அணா தபால் தலை சேர்த்து அனுப்பினால் புத்தகம் அனுப்பப்படும். விலை : கிளேஸ் அணா 5; ரப் அணா 3.

## கந்தபுராணச் சுருக்கம்

### மூலமும் பொழிப்புரையும் விருத்தியும்

இந்நூல் ஸ்ரீமத் - சம்பந்தசரணாலய சுவாமிகளால் சொற்சுவை, பொருட்சுவை, சந்தச்சுவை முதலியன ததும்ப 1000 பாடல்களாகப் பாடப்பட்டது; பரந்து கிடக்கும் பெரிய கந்தபுராணக் கதையை இனிது விளக்குவது. மூலத்திற்கேற்ற பொழிப்புரையும், விருத்தியும் பலநூற் பிரமாணங்களுடனே எழுதப்பட்டுள்ளன. விலை ரூபா 3.

# முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.

Edited & Published by T. V. Kalyanasundaran; Printed by T. V. Volaganathan at the Sadhu Press, 18, Ganapathi Mudali St.

